# கல்கி

மலர் 15
இதழ் 2

## பொருளடக்கம்

1955 ஆகஸ்டு 14




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# இதோ !



# தி ஸ்டாண்டர்ட் டென்

- ★ 2000 மைல் ஆர். ஏ. ஸி. சர்வதேசப் போட்டியில் வெற்றி பெற்றது.
- ★ மிக மிகச் சிக்கனமானது. ஒரு காலனுக்கு 35 மைல்கள் ஓடும். இந்தக் காருக்கு 3 மாத வரி ரூ. 21/-
- ★ வெளிப்புறத்திலிருந்தே சாமான்களை வைக்கவும் எடுக்கவும் உள்ள விசாலமான இட வசதி.
- ★ வான்கார்ட் மாதிரி க்ரோமியம் பினேட் செய்த முகப்பு க்ரில்லும் பம்பர் ஓவர்ரைடர்களும்.
- ★ வெகு நேர்த்தியாகவும் சுகமாகவும் ஓடுவதற்குற்ற 10 H. P. என்ஜின்.

தென்னிந்தியாவில் டீலர்கள் :

**யூனியன் கோ., (மோட்டார்ஸ்) லிமிடெட்**
மதராஸ், பெங்களூர் & உதகமண்டலம்

**அஸோஸியேடட் ஆடோமொபைல்ஸ் லிமிடெட்**
கோயம்புத்தூர் & எர்ணகுளம்
கோயமுத்தூர் ஜில்லாவுக்கும் திரு-கொ. ராஜ்யத்தில் கொச்சி பகுதிக்கும்

**ஜி. என். சக்ரபாணி செட்டி & சன்ஸ் லிமிடெட்**
மதுரை & திருநெல்வேலி
மதுரை ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு

**காசி & சேது, தஞ்சாவூர் & கும்பகோணம்**
தஞ்சாவூர் & தென்னார்காடு ஜில்லாக்களுக்கு

**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (சௌத் இந்தியா) லிமிடெட்**
திருவனந்தபுரம், கொல்லம், கோட்டயம்
திருவாங்கூர் - கொச்சி ராஜ்யம் (கொச்சி பகுதி நீங்கலாக), மலபார் மற்றும் தென் கன்னடம் ஜில்லாக்களுக்கு

**ஸ்ரீ பட்டாபிராம் கமர்ஷியல் ஸிண்டிகேட், காக்கிநாடா**
விசாகப்பட்டினம், ஸ்ரீகாகுளம் & கிழக்கு கோதாவரி ஜில்லாக்களுக்கு

**ஸ்ரீ பிரகாஷ் ஆடோமொபைல்ஸ், விஜயவாடா**
குண்டூர், கிருஷ்ணா மற்றும் மேற்கு கோதாவரி ஜில்லாக்களுக்கு

**ஆர். கார்னியர் & கோ., 4, [illegible] தெரு, [illegible], புதுச்சேரி**
புதுச்சேரி & காரைக்காலுக்கு



மலர் 15 } தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற { மன்மத ஆடி 29
இதழ் 2 } தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# ஒன்பதாவது சுதந்திர விழா

பாரத நாட்டின் சரித்திரத்திலே, பாரத மக்களின் வாழ்விலே, ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி மிகப் புனித நாள் ஆகும்.

எட்டு ஆண்டுகளுக்கு முன் இதே தினத்தில்தான் பாரதத் தவப் புதல்வர்கள் பல்லாண்டு பல்லாண்டுகளாகப் புரிந்து வந்த புனித வேள்வி, இதற்கு முன் உலகம் கண்டிராத வகையில் பலன் தந்தது.

அந்த நல்நாளில்தான் பாரத அன்னையின் அடிமை விலங்குகள் தகர்ந்து, பாரத மக்களின் இன்னல்களுக்கு விடிவு ஏற்பட்டது.

ஆம்; பாரத புண்ணிய பூமி சுதந்திரம் பெற்று எட்டு ஆண்டுகள் பூர்த்தியாகி, நாளை ஒன்பதாவது ஆண்டு ஆரம்பமாகிறது.

இந்த மங்கள தினம் பாரத நாட்டில் மாத்திரமல்ல, அகில உலகிலும் பாரத மக்கள் வசிக்கும் இடங்களில் எல்லாம் குதூகலத்துடன் கொண்டாடப்படும்.

இன்று உலக அரங்கில் மகோன்னத ஸ்தானம் வகிக்கும் வல்லரசுகள் சுதந்திரம் பெற்ற பிறகும் ஐம்பது, நூறு, இருநூறு ஆண்டுகள் பாடுபட்ட பின்தான் இன்றைய முன்னேற்ற நிலையை அடைந்திருக்கின்றன என்பதை ஒவ்வொருவரும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அந்த நாடுகள் சுதந்திரம் பெற்றுப் பல ஆண்டுகள் வரையில் அங்கு கொடுமைகளும் அமளியும் ஆர்ப்பாட்டமும் நடந்து கொண்டு இருந்தன.

ஆனால், பாரத நாடோவெனில், சுதந்திரம் பெற்ற எட்டு வருஷங்களுக்குள் பல்வேறு துறைகளிலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

ஜனநாயகத்திற்கு வழிகாட்டியாக உலக மக்களுக்கு அறப்பாதையை எடுத்துக் கூறும் மகத்தான நிலையை வகித்து வருகிறது.

ஆத்ம சக்தி காரணமாக, சாத்துவீகக் கொள்கை காரணமாக, வல்லரசுகளுக்குச் சமமான செல்வாக்கைப் பெற்றிருக்கிறது நம் பாரத நாடு.

நமது தலைவர் ஜவாஹர்லால் நேருவுக்கு ருஷ்யா, பிரிட்டன் உள்படப் பல நாடுகளும் போட்டி போட்டுக் கொண்டு வரவேற்பு அளித்த கௌரவத்தை உலகமே கண்டு அறிவடைந்தது. சுதந்திர இந்தியாவின் பெருமைக்கு இதைக் காட்டிலும் வேறு சான்று என்ன வேண்டும்?

* * * *

சென்ற எட்டு வருஷங்களில் சுதந்திர இந்தியா எத்தனையோ பெரும் காரியங்களைச் சாதித்திருக்கிறது.

சுதந்திரக் குழந்தையை விழுங்க வந்த பிரம்மாண்டமான ஹிந்து – முஸ்லிம் வகுப்புவாத பூதத்தை இந்தியா எதிர்த்து நின்று வெற்றி பெற்றது, ஒரு பெரும் அதிசயமாகும்.

இந்தக் குறுகிய காலத்துக்குள் முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தியாகி, பஞ்சமும் பற்றுக்குறைகளும் பறந்தோடும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இன்னும் சில மாதங்களில் இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டத்தின் ஏற்பாடுகள் ஆரம்பமாகப் போகின்றன.

வேலையில்லாக் கஷ்டத்தை ஒழித்து, பிற நாடுகளின் தயவை நாடாமல் இந்தியாவிலேயே வேண்டிய பொருள்களையும் கருவிகளையும் உற்பத்தி செய்ய வேண்டும் என்பதே இரண்டாவது திட்டத்தின் முக்கிய நோக்கம் ஆகும்.

உலகத்தை நாசமாக்குவதற்கு அணுசக்தியை உபயோகிக்கக் கூடாது என்பதற்காக, உலகில் உள்ள ஆயிரத்து இருநூறு பிரபல விஞ்ஞானிகள் சென்ற வாரம் ஜினிவாவில் மகாநாடு கூடினார்கள் அல்லவா!

அந்த மகாநாட்டுக்குப் பிரபல இந்திய விஞ்ஞானி டாக்டர் ஹோமி பாபாதான் தலைமை வகித்தார்.

சர்வதேச அரசியல்வாதிகளிடையே மாத்திரமல்ல, உலக விஞ்ஞானிகளிடையும் இந்தியாவின் மதிப்பு உயர்ந்திருக்கிறது என்பதற்கு இது ஒரு சான்று.

எல்லா வகையிலும் குடியரசு இந்திய சர்க்காரின் சாதனைகளைக் குறித்துப் பாரத மக்கள் பெருமை அடையலாம்.

சுதந்திர பாரதத்தின் ஒன்பதாவது ஆண்டில் பாரத மக்கள் மேலும் மேலும் பல நலன்களைப் பெற்று, பெருமையையும் பொருளாதார சுபிட்சத்தையும் அடைய வேண்டும் என்றும், அதற்குரிய எல்லா நலன்களையும் நமது பாரதப் பிரதமர் நேருஜிக்கு வழங்க வேண்டும் என்றும் சுதந்திர தேவியைப் பிரார்த்திக்கிறோம்.

வாழ்க, சுதந்திர பாரதம்!

# பூதானச் சட்டம்

விநோபா அடிகள் ஆரம்பித்த பூதான இயக்கம் நாளுக்கு நாள் தீவிரமாகிக் கொண்டு வருகிறது. எத்தனையோ பிரபுக்கள் தங்கள் நிலங்களை வயலில் நின்று பாடுபட்டு உழைக்கும் உழவர்களுக்கு உள்ளார்ந்த அன்புடன் தானமாக வழங்கி வருகிறார்கள். நிலத்தை வாங்கினாலும் சரி, விற்றாலும் சரி அதற்கெல்லாம் ஸ்டாம்புக் கட்டணம், ரிஜிஸ்டிரேஷன் கட்டணம், பவர் ஆப் அட்டார்னி கட்டணம் ஆகியவை செலுத்த வேண்டும். இவை யெல்லாம் கட்டிப் பெறப்பட்ட நிலம்தான் ஒருவருக்குச் சட்டபூர்வமாக உடைமையாகும். ஆனால் நிலத்தைத் தானமாக வழங்குபவர்களையும் சரி, உடைமையாகப் பெறும் ஏழை விவசாயிகளையும் சரி, இவற்றை யெல்லாம் கட்டும்படி வற்புறுத்துவது பூதான முறைக்கு உகந்ததா! இதை உணர்ந்தே சர்க்கார், நிலதானம் வழங்கப்படும் விஷயத்தில் இத்தகைய கட்டணங்கள் இன்றிய சட்டபூர்வமாக்க ஒரு மசோதா சட்டசபைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். இம்மசோதா சட்ட சபையில் நிறைவேறிச் சட்டமாக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

இந்த அரிய சந்தர்ப்பத்தில் விநோபா அடிகள் எப்பொழுது, எப்படி இம் மாபெரும் புரட்சியைத் தொடங்கினார் என்று அறிந்து கொள்வதில் நேயர்கள் ஆவலாக இருப்பார்கள். பூதான இயக்கத்தின் ஆரம்பத்தையும் அதன் வளர்ச்சியையும் பற்றிய கட்டுரைகள் இனியும் வெளியாகும். வழக்கம் போல விநோபா அடிகளுடன் கூடவே யாத்திரை புரியும் ஸ்ரீ சுரேஷ்ராம் அவர்களே எழுதி யனுப்புகிறார்கள்.

# ஓவியர் சந்திரா நினைவுச் சித்திரப் போட்டி

"ஓவியர் சந்திராவின் மறைவு கலை உலகுக்கு ஒரு மகத்தான நஷ்டம்" என்று விந்தியப் பிரதேச லெப்டினண்ட் கவர்னர் கனம் கே. சந்தானம் தம்முடைய அநுதாபத் தந்தியில் கூறியிருக்கிறார். 'கல்கி' பத்திரிகை ஒரு வார இதழாக வர ஆரம்பித்த தொடக்கத்திலிருந்தே நமது ஸ்தாபனத்தில் சேர்ந்து அரும் பணி ஆற்றி வந்தவர் ஓவியர் 'சந்திரா'. தமிழ் நாட்டில் அவருடைய சித்திரங்களை வாரந்தோறும் ஆவலோடு எதிர்பார்த்து, மகிழ்ந்து, வியப்போடு பாராட்டிய ரசிகர்கள் ஆயிரக்கணக்கானவர். அவருடைய மறைவு நமது ஸ்தாபனத்துக்கு மட்டுமன்றித் தமிழ் நாட்டுக்கே, கலை யுலகுக்கே, ஒரு பெரும் நஷ்டமாகும். நாள்தோறும் நமக்கு இது குறித்து அநுதாபம் தெரிவித்துப் பல நேயர்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இக்கடிதங்களை யெல்லாம் பிரசுரிக்க இயலவில்லை. இந்த நேயர்கள் அனைவருக்கும் நன்றி செலுத்துகிறோம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் மறைந்த கலைஞரின் நினைவுக்காக நாம் செய்யும் ஒரு காணிக்கையைப் பற்றி இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

திறமை மிக்க அபூர்வ சித்திரக்காரர்கள் தமிழ் நாட்டில் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்களுக்குச் சமயமும் சந்தர்ப்பமும், வசதியும் வாய்ப்பும் கிடைக்காததால் அவர்கள் திறமை மக்களுக்குத் தெரியாமல் இருந்து வருகிறது.

அவர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம் கொடுக்கும் முறையில் "ஓவியர் சந்திரா நினைவுச் சித்திரப் போட்டி" ஒன்றை ஆரம்பித்திருக்கிறோம். இந்தப் போட்டியில் யாவரும் கலந்து கொள்ளலாம்.

ஒருவர் எத்தனை சித்திரங்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் சித்திரங்கள் இரண்டு வர்ணத்துக்கு மேல் இருக்கக்கூடாது.

போட்டிக்கு வந்த சித்திரங்களில் நாலு சித்திரங்கள் தேர்ந்தெடுக்கப்படும். அந்த நாலு சித்திரங்களும் 'கல்கி' தீபாவளி மலரில் பிரசுரமாகும். ஒவ்வொரு சித்திரத்துக்கும் ரூ. 50 சன்மானம் வழங்கப்படும்.

சித்திரங்கள் நல்ல டிராயிங் பேப்பரில் வரைந்திருக்க வேண்டும். ஒரு வர்ணத்திலோ இரண்டு வர்ணத்திலோ வரைந்து அனுப்பலாம். 12" × 8" அளவிலாவது 15" × 7" அளவிலாவது சித்திரங்கள் இருக்க வேண்டும்.

சித்திரங்கள் எல்லாம் செப்டம்பர் மீ 30-ம் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும். சித்திரங்கள் மடங்கி, கசங்கி, வீணாகாமல் ஜாக்கிரதையாக அனுப்பி வைக்க வேண்டும்.

கவரின் மேல் "சந்திரா நினைவுச் சித்திரப் போட்டி" என்று எழுதி அனுப்ப வேணும்.

## சேவகர்கள் ஜாக்கிரதை !

சர்க்கார் இலாகாக்களில் லஞ்ச ஒழிப்புக்குத் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போவதாகப் பாரத சர்க்கார் உள்நாட்டு மந்திரி தெரிவித்திருக்கிறார்.

## அபாயம் நேரிடலாம் !

குறுக்கெழுத்துப் போட்டிகளைக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவர இந்திய பார்லிமெண்டில் ஒரு மசோதா வரப்போகிறது.




ஸ்ரீ கட்டாவ்
மகான்ஜி ஸ்பின்னிங் &
வீவிங் கம்பெனி லிமிடெட்

மில்ஸ்: பைகுலா, பம்பாய்.

**தையல் நூல்**

அலுவலகம்: லெக்ஷ்மி பில்டிங், பாலாடு எஸ்டேட், பம்பாய் 1 கிளை: 216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, மதராஸ்.

SISTA'S-KMS-141.TAM

# பி. ஸி. ஜி கோளாறு

கீழ்க்கண்ட 28—7—55 தேதிக் கடிதம் திருச்சிராப்பள்ளி இந்தியன் பாங்கு ஏஜண்ட் ஸ்ரீ வி. பி. கோபாலாச்சாரி அவர்களிடமிருந்து ராஜாஜிக்கு வந்துள்ளது:

அன்புமிக்க ஐயா,

என் மகன் ஜி. சம்பத்துக்குச் சென்ற ஜூலை மாதம் 14 வயது, 7 மாதம் பூர்த்தியானது. திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியின் உயர்தரப் பாடசாலையில் எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் படித்து வந்தான். சென்ற ஆண்டு ஜூலை மாதக் கடைசியில் பள்ளிக்கூடத்திலுள்ள எல்லா மாணவர்களுக்கும் பி. ஸி. ஜி குத்தப்பட்டது. அவர்களில் என் மகனும் ஒருவன். இது சம்பந்தமாக எங்களுக்கு முன்னறிவிப்புச் செய்யப்படவில்லை. எங்களுடைய சம்மதமும் பெறவில்லை.

செப்டம்பர் மாதத்தில் பையனுக்குக் களைப்பு, தலைவலி முதலிய உபத்திரவங்கள் ஏற்பட்டன. பசியும் நின்று விட்டது. எங்கள் குடும்ப வைத்தியர் செய்த வழக்கமான சிகிச்சையினால் யாதொரு பயனுமில்லை. இரத்த சோகைக்கான குறிகள் காணத் தொடங்கின. மாலை நேரங்களில் இலேசாக ஜுரமும் வரத் தொடங்கிற்று. அவன் 12—11—54 அன்று சுவாசப் பைகளை எக்ஸ்ரே போட்டோ எடுத்ததோடு இரத்தப் பரிசோதனையும் செய்யப்பட்டது. தொடர்ந்து சிகிச்சை செய்து வந்துங்கூட மாலை வேளைகளில் ஜுரம் தொடர்ந்து இருந்து வந்தது. ஆகையால், இவ்வாண்டு ஜனவரியில் அவனைச் சென்னைக்கு அழைத்து வந்து டாக்டர் ...... யிடம் காண்பித்தேன். அவர் சுவாசப்பையில் உண்டாகும் டி. பி. யின் ஆரம்பம் என்று கூறினார். இதற்கு முன்பெல்லாம் பையன் மிக ஆரோக்கியத்தோடுதான் இருந்து வந்தான். பிறந்ததிலிருந்து எந்தவிதமான பெரிய நோயும் அவனுக்கு ஏற்பட்டதில்லை. பி. ஸி. ஜி ஊசிக் குத்தியதினால் பையனுக்கு ஏற்பட்ட இந்த நோய் காரணமாக நான் அடைந்த பொருள் நஷ்டம் ஒருபுறமிருக்க, என் குடும்பத்தார் அடைந்துள்ள மன வியாகூலத்தை வார்த்தைகளால் சொல்லி முடியாது. இத்துடன் அவனுக்குச் சிகிச்சை செய்த டாக்டர்களில் ஒருவரின் பரிசோதனைக் குறிப்பும் அனுப்பியிருக்கிறேன்.

பரிசோதனைக் குறிப்பு

ஆர். சாம்பசிவன், எம். பி. பி. எஸ். திருச்சிராப்பள்ளி. 26—7—55.

ஜி. சம்பத்; வயது: 16; பி. ஸி. ஜி குத்தப்பட்டது: ஜூலை—ஆகஸ்டு, 54.

குறைந்த ஜுரம், தலைவலி, ஆனோரெக்ஸியா: அக்டோபர், 54.

ட்யூப்ளோமைஸின்: அதிகரித்த ஜுரம், நவம்பர் 54.

லோ. ஆர். பி. ஸி., கௌண்ட், டபிள்யூ. பி.ஸி. கௌண்ட்: அதனால் பத்து பி. எப். பி-12 ஊசியும், காம்போலனும் கொடுக்கப்பட்டன: நவம்பர்—டிசம்பர் 54; உடல் நிலை: அபிவிருத்தி, ஆனால் குறைந்த ஜுரம் தொடர்ந்து இருந்தது. சுவாசப்பையில் கோளாறு இல்லை. இடது முதுகுப் புறத்திலும், வயிற்றிலும் அழுத்தினால் வலி. ரெஸொக்ளினும், அதையொட்டிய மருந்துகளும் அந்தச் சமயத்தில் கொடுக்கப்பட்டன.

(ஒப்பம்) ஆர். சாம்பசிவன்.

** ** **

பிரீமியர் ரேடியோலாஜிகல் இன்ஸ்டிட்யூட்,
எட்வர்ட் எலியட் ரோடு, மயிலாப்பூர்.

டாக்டர் கே. ஆர். துரைசாமி, எம். ஏ. ஆர். எஸ்.
டாக்டர் ஏ. கிருஷ்ணன், எம். பி. பி. எஸ்.

26—6—55

ஸ்ரீ சம்பத். மார்பு — ப்ரொடக்டிவ் இன்பில்ட்ரேஷன், கால்ஸிப் வைட் ப்லோஸை (ட்யூபர்குலோஸிஸ் வியாதியின் குறிகள் வலது பக்கம் மேல்புறம்)

(ஒப்பம்) கே. ஆர். துரைசாமி.

2

மதுரை 31 வது வார்டு காசி மல்லித் தோட்டம் டோர் நெ 16ல் வசிக்கும் தல்மா. கோ. முத்துலெஷ்மி அம்மாள் (வயது 60) தெரிவித்துக் கொள்வது.

பி. ஸி. ஜி அதிகாரிகளின் நம்பிக்கையான பேச்சின் காரணமாய்ச் சென்ற 1½ மாதத்திற்கு முன் பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டேன். காலையில் வைத்துக் கொண்ட ஊசியினால் மாலையில் ஊசி வைத்த இடத்தில் கட்டி புறப்பட்டது. 10 தினங்களுக்குப் பிறகு பொறுக்க முடியாத வலியும், ஜுரமும் ஏற்பட்டது. வலி சிறிதளவும் குறையாமல் இருந்து வரும்

## பி. ஸி. ஜி

ராஜாஜி எழுதிய பி. ஸி. ஜி ஆங்கிலப் புத்தகம் ஹிகின்பாதம் ரெயில்வேப் புத்தகக் கடைகளில் பிரதி ஒன்று நான்கு அணுவுக்குக் கிடைக்கும்.

பொழுது உடம்பில் கழுத்து முதல் கால் வரை கொப்பளங்கள் அக்கி மாதிரி உண்டாகி விட்டது. ஜுரம் கண்டவுடன் முனிஸிபல் சுகாதார அதிகாரியைப் பேட்டி கண்டு உடம்பின் நிலைமையை நேரில் காண்பித்தேன். மேற்படியார் உடனடியாக மதுரை ஜெனரல் ஆஸ்பத்திரிக்குச் சென்று சிகிச்சை செய்து கொள்ளும்படி 28-7-55 தேதி சிறு கடிதத்தின் மூலமாய்ச் சிபார்சு செய்தார். உடனே ஆஸ்பத்திரிக்குச் சென்று மேற்படி கடிதத்தைக் காண்பித்தேன். உடம்பில் வலி பொறுக்கமுடியாமல் கதறினேன். ஆனால் ஏழையின் கதறல் அம்பலத்திற்கு ஏறவில்லை. அதிகாரத்தின் பேரிலும் சாமர்த்தியத்தின் காரணமாகவும் கழித்து விட்டார்கள் டாக்டர்கள். கடைசியாக 1-8-55 தேதியில்தான் எனக்கு ஊசி போடப்பட்டது. அதன் பிறகு மூன்று நான்கு தினங்கள் வரை மிக்சர் மருந்தும், மாத்திரைகளும் கொடுக்கப்பட்டன. இனி குணமாகி விடும் என டாக்டர் ஆசிர்வாதம் செய்தார். ஆனால் பலன்! வலியும் கொப்பளங்களும் கொஞ்சம்கூட மறையவே இல்லை. ஆஸ்பத்திரிக்கு ஏன் சென்றோம் என வருத்தப்பட்டேன். பிறகு வீட்டில் இருந்து கொண்டே நாட்டு வைத்தியம் செய்து கொண்டதில் உடம்பில் இருந்த ஜுரம் நின்று விட்டது. வலி மட்டும் உடம்பை விட்டுப் போக மறுக்கிறது. அப்படி வலியுடன் கஷ்டப்படும் சமயத்தில் அரிப்பும் துணையாகச் சேர்ந்து கொண்டது.

இந்நிலை நீடித்தால் என் நிலை என்ன ஆவது! சொவு ஜீவனம் நடத்தும் பெரிய ஒரு ஏழைக் குடும்பத்தின் தலைவியாக இருக்கும் எனக்கு இந்நிலையினால் பெருத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

ஆகையால், என் உடம்பில் ஏற்பட்டிருக்கும் கொப்பளங்கள், வலிகள், அரிப்புகள் மறைய எனக்கு வேண்டிய சிகிச்சை செய்யச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குச் சிபார்சு செய்ய வேண்டுகிறேன்.

குறிப்பு:—இன்று காலையிலிருந்து உடம்பில் அரிப்பு அதிகம் ஏற்பட்டிருப்பதின் காரணமாய்க் கொப்பளங்களிலிருந்து நீர் கசிவு ஏற்பட்டிருக்கிறது. வணக்கம்.

இப்படிக்கு,

தல்மா. கோ. முத்துலெக்ஷ்மி அம்மாள்

*சென்னை ராஜ்யப் பிரதமர் அவர்கள், சென்னை. மற்றும் பல அதிகாரிகளுக்கும் இதன் பிரதிகள் அனுப்பப்பட்டிருக்கின்றன.*

# என்ன சேதி?

## குரூர விளையாட்டு

பி. ஸி. ஜி யின் துன்ப விளைவுகளைப் பற்றிய இரண்டு கடிதங்கள் இந்த இதழில் பிரசுரமாகி யிருக்கின்றன. திருச்சிப் பிரமுகர் ஒருவர் தமது பையனுக்குத் தம்முடைய சம்மதமோ தமக்குத் தகவலோ இல்லாமல் ஊசி குத்தப்பட்டு அதனால் ஏற்பட்டுள்ள தொல்லைகளை விவரமாக எடுத்துக் கூறியிருக்கிறார். பெற்றோர்களுடைய சம்மதம் பெறும் கடமையிருக்க, அவர்களுக்குத் தகவலும் கூடக் கொடுக்காமல் இருப்பது பெரும் அநீதியாகும். கோர்ட்டுக்குச் சென்றால் இந்த விதமான விவகாரம் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியதாக முடியும். சட்டப்படி பெற்றோர் சம்மதமின்றிக் குழந்தையைத் தொடும் உரிமை யாருக்கும் இல்லை. துன்பமோ நஷ்டமோ ஏற்படாமல் இருந்தாலுங்கூட இது சட்டம்.

மற்றொரு கடிதம் மதுரை முத்துலக்ஷ்மி அம்மாளிடமிருந்து. பாவம், அறுபது வயதுக் கிழவிக்குப் போய் இந்தப் பி. ஸி. ஜி. அல்லது அதற்குச் சம்பந்தப்பட்ட பரிசோதனைக் குத்தை எதற்காகப் போட்டார்களோ கடவுளுக்குத் தான் வெளிச்சம். எல்லாம் குரூர விளையாட்டாகவே இருக்கிறது!

## வைத்தியர்கள் மகாநாடு

குற்றாலத்தில் சென்னை வைத்தியர்கள் கூடப்போகிறார்களாம். கோயமுத்தூருக்குச் சென்று "விசாரணை" செய்த நிபுணர்கள் வசந்தா கண் இழந்தது வேறு ஒரு புது வியாதியினால் என்று சொன்னார்களே, அந்த வியாதியால் பி. ஸி. ஜி குத்தப்படாத வேறு யாராவது கண் இழந்துவிட்டதைக் கண்டார்களா? அவர்கள் பெயரையும் விவரங்களையும் குறித்துக் கொண்டார்களா? என்று அவர்களைக் கேட்க வேண்டும்.

## சபாஷ்!

ஆந்திர ராஜ்யத்திலிருந்து ஒரு செய்தி வந்திருக்கிறது. கொத்தகூடம் என்ற ஊருக்கு பி. ஸி. ஜி ஊசி குத்த சர்க்கார் வாக்ஸினேட்டர்கள் வந்தார்களாம். ஆனால் அந்த ஊர் சர்க்கார் ஹைஸ்கூலில் படிக்கும் சிறுவர்களின் பெற்றோர்களிடமிருந்து, "எங்கள் குழந்தைகளுக்கு பி. ஸி. ஜி ஊசி குத்த அவர்களை அனுமதிக்காதீர்கள்" என்று ஏராளமான கடிதங்கள் அப்பள்ளிக் கூடத் தலைமை ஆசிரியருக்கு வந்திருந்தனவாம். தலைமை ஆசிரியர் இவ்விஷயத்தை ராஜ்ய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்.

என்ன இருந்தாலும் ஆந்திரர்கள் கொஞ்சம் தைரியசாலிகள்தான். சற்று முரட்டுத்தனமாக இருந்தாலும் பரவாயில்லை.

## பிரஜா சோஷலிஸ்ட் கட்சி

நாட்டின் எதிர்கால நலனை உத்தேசித்து, பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியின் தலைமைப் பதவியை மீண்டும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று ஸ்ரீ ஜெயப்



கர்நாடக சங்கீதத்தின் மும்மூர்த்திகள் என்று கொண்டாடப்படுவோர் தியாகராஜர், முத்துசாமி தீக்ஷிதர், ஸ்யாமா சாஸ்திரி ஆகியோர். மும்மூர்த்திகளும் ஒருமித்து ஒரே இடத்தில் பிறக்கும் புண்ணியம் நிறைந்த அந்தத் திருவாரூர் ஸ்தலத்தில், இம் மூவருக்கும் ஓர் ஞாபகார்த்தம் எழுப்ப வேண்டும் என்ற யோசனையை ஆதரித்து மயிலாப்பூரில் சென்ற மாதத்தில் ஒரு சங்கீத ரஸிகர் கூட்டம் நடைபெற்றது. தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜத்தின் ஆதரவில் நடைபெற்ற மேற்படி கூட்டத்துக்குத் தலைமை வகித்த சுப்ரீம் கோர்ட் நீதிபதி சங்கீதகலாநிதி டி. எல். வெங்கட்ராமய்யர் "இந்த உத்தமமான கைங்கர்யத்துக்குச் சங்கீத வித்வான்களும், ரஸிகர்களும் தாராளமாக நன்கொடை வழங்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

## புதிய 'ட்ரில்'!




மேஜர் ஜெனரல் இஸ்கந்தர் மிர்ஸா பாகிஸ்தானின் தாற்காலிக கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

---

பிரகாஷ் நாராயணைக் கேட்டுக் கொள்வதாகச் சென்ற வாரம் தில்லியில் நடந்த பி. சோ. க. மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேறியுள்ளது. அரசியலிலிருந்து அறவே விலகி பூதான இயக்கத்தில் தமது வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணம் செய்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டுள்ள ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண், பி. சோ. கட்சியின் மேற்படி வேண்டுகோளுக்கு இணங்குவாரா என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும்.

எனினும், சர்க்கார் கட்சிக்குச் சரியான எதிர்க் கட்சியாக உருவாகும் அரிய வாய்ப்பைப் பெற்றிருந்த பி. சோ. கட்சியினர், அச் சந்தர்ப்பத்தைச் சரிவர உபயோகப் படுத்திக் கொள்ளத் தவறி விட்டார்கள். திருவாங்கூரில் பி. சோ. கட்சி சர்க்கார் ஏற்படும் வாய்ப்புக் கிடைத்தது. அதையும் அக் கட்சியினர் உற்ற வகையில் உபயோகப்படுத்திக் கொள்ளாது, அதிகாரத்தை இழக்க நேர்ந்தது.

பி. சோ. கட்சியின் தற்போதைய பரிதாப நிலைக்கு அதன் தலைவர்கள் காரணம் என்று சொல்ல வேண்டும். தங்களுக்குள் ஒற்றுமையில்லாத தலைவர்கள், தங்களுடைய அபிப்பிராய பேதத்தைச் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ள முடியாத தலைவர்கள் தேச மக்களுக்காக என்ன சாதிக்க முடியும் என்ற சந்தேகம் மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. அதற்கு இடம் கொடுத்து விட்டதோடு இப்பொழுது பி. சோ. கட்சி தலையே இல்லாமல் தத்தளிக்கும்படி நேர்ந்திருக்கிறது!

### வாழ்த்துக் கூறுகிறோம்

இந்திய ஜனாதிபதி, சென்னை ராஜ்யத்தின் சபாநாயகரான திரு ஜே. சிவஷண்முகம் பிள்ளை அவர்களை யூனியன் பப்ளிக் சர்விஸ் கமிஷன் அங்கத்தினராக நியமித்துள்ளார். சென்னை கார்ப்பொரேஷன் அங்கத்தினராகவும், பிறகு மேயராகவும், பல ஆண்டுகள் வரையில் சென்னை சட்டசபையின் தலைவராகவும் இருந்து திரு சிவஷண்முகம் பிள்ளை செய்துள்ள அருந்தொண்டை யாரும் மறக்க முடியாது. இன்று வரையில் சபாநாயகராக இருந்து வரும் திரு பிள்ளை அவர்களின் திறமையினாலும், பாரபட்சமற்ற தன்மையினாலும் சென்னை சட்டசபையின் மதிப்பே உயர்ந்திருக்கிறது என்று கூறுவது மிகையாகாது. எனவே, புதிய பதவியை ஏற்கப் போகும் திரு சிவ ஷண்முகம் பிள்ளை அவர்களுக்கு வாழ்த்துக் கூறுவதுடன், அவர் மேலும் மேலும் இந்தப் புதிய துறையின் மூலம் நாட்டுக்குச் சிறந்த தொண்டு புரிந்து வரத் தமிழ்க் கடவுளான முருகப் பெருமானுடைய திருவருளைச் சிந்திக்கின்றோம்.



எமது
# சேவை

இருபத்தைந்து வருடங்களுக்கு மேல், ஜெனரல் மோட்டார்ஸ் (G. M. I.) கார், பஸ், லாரிகள் விநியோகித்து,தேவையான வசதிகளையும், உறுப்புகளையும் வழங்குகிறோம்.

எமது
# உறுதி

ஜெனரல் மோட்டார்ஸ் (G. M. I.) நம் நாட்டிலிருந்து விலகியதால், அவர்கள் மேற்கொண்டிருந்த உறுப்பு விநியோகத்தை நாங்கள் ஏற்றுக் கொண்டுள்ளோம். செவர்லே, வாக்ஸால், ப்யூக், பாண்டியாக், காடிலாக், ஓல்ட்ஸ்மொபைல், ஓபெல், பெட்போர்டு, ஜி. எம். ஸி. கார், பஸ், லாரிகளுக்கு வேண்டிய உறுப்புகளை நாங்கள் உடனடியாக வழங்குவோம்.

தென்னிந்திய விநியோகஸ்தர்கள் :

## டி.வி.சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்

தலைமை ஆபீஸ்: மதுரை

திருச்சிராப்பள்ளி – திருநெல்வேலி – புதுக்கோட்டை – சேலம் – கோயமுத்தூர்

## சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்

சென்னை - 6

## மதராஸ் ஆட்டோ ஸர்விஸ் லிமிடெட்

சென்னை - பெங்களூர்




## 81. வானரர்களின் சந்தேகம்

**பா**பம் செய்துவிட்டு அதன் பயனாக வந்த அபாயத்தினின்று எப்படித் தப்புவது என்று ராவணன் கஷ்டப் பட்டான். அரசர்களின் வழக்கம் போல் மந்திராலோசனை சபை கூட்டினான். சபையில் சர்க்கரைப் பேச்சு பேசுபவர்கள் பலர் பேசினார்கள். ஆனால் இருவர் ராவணனுக்குக் கோபம் வரும்படி கடினமாகப் பேசினார்கள்.

'தவறு செய்தாய். ஆயினும் நான் உனக்காக உயிரைக் கொடுப்பேன்!' என்றான் ஒருவன்.

'பாபத்தைச் செய்தாய். ஆயினும் இப்போதும் தப்புவதற்கு வழி உண்டு. அந்த வழியைப் பிடித்துச் செல்வாயானால் நாம் எல்லாரும் அழியாமல் சுகமாக இருக்கலாம். சீதையைத் திரும்பித் தந்து விட்டு ராமனிடம் சரணமடைவாய்' என்றான் விபீஷணன்.

'மாட்டேன்' என்றான் ராவணன். 'அப்படியானால் உன்னை விட்டேன்' என்றான் விபீஷணன்.

**த**ரும சங்கடம் ஒன்று வந்து எதிரில் நிற்கும் போது தத்தம் சுபாவத்தை அனுசரித்து அவரவர்கள் நடந்து கொள்வார்கள். எல்லாரும் ஒன்று போல் நடந்து கொள்ள மாட்டார்கள்.

கர்வபங்கத்துக்கு ராவணன் மனம் ஒப்பவில்லை. பாப காரியம் செய்வது கஷ்டமானால், பிழையை ஒப்புக் கொண்டு 'நான் தோற்றேன்' என்று ஒப்புக் கொள்ளுவது அதைவிட கஷ்டமான காரியம். பாபம் செய்வதற்குத் தைரியம் வேண்டும்; பாபம் செய்தேன் என்று ஒப்புக் கொள்வதற்கு இரு மடங்கு தைரியம் வேண்டும். அந்த தைரியம் ராவணனுக்கு இருக்கவில்லை. அவனுடைய சுபாவத்தில் அதற்கு இடமே இல்லை.

அதருமம் ஒன்று நடக்கும் போது பாபம் செய்தவனைச் சேர்ந்து நிற்பவர்களுக்கு ஒரு பெரிய பிரச்னை ஏற்படுகிறது. 'இந்த வீட்டில் நான் சோறு உண்டவன். இவனை நான் எப்படிக் கைவிடலாம்?' 'கூடப் பிறந்தவன் அறியாமையால் பிழை செய்தான். அவனை நான் விட்டு விடுவது பயங்காளித்தனமாகும்.' இவ்வாறான சிக்கல்கள் கிளம்பும். செய்யப்பட்ட அதருமத்தில் தாமும் பங்கு எடுத்துக் கொண்டு விடுவதே வீரர்களுடைய கடமை என்று முடிப்பார்கள் சிலர். ஆனால் வேறு விதமாக நினைப்பவர்களும் உண்டு. பிழை செய்தவனைத் திருத்துவதற்கு வேண்டியதெல்லாம் செய்து பார்ப்பார்கள். அதனால் உண்டாகும் கோபம், வெறுப்பு, நஷ்டம் இவற்றைப் பொருட்படுத்தாமல் செய்யக் கூடியதையெல்லாம் செய்து பார்ப்பார்கள். அந்த முயற்சி யெல்

லாம் விணை பின், பாபம் செய்பவனைத் துறப்பார்கள். தருமத்தைத் துறக்க மாட்டார்கள். அதருமத்தில் சேருவது ஒருநாளும் கடமையாகாது என்பது அவர்களுடைய கருத்து. செய்ய வேண்டிய முயற்சியைச் செய்யாம விருப்பது அதருமமாகும். அதையெல்லாம் செய்து விட்ட பின், தம் கடமை முன்போலவே நிற்கும். தருமத்தைப் புறக்கணித்து விட்டு அண்ணனுக்காகத் தம்பியோ தம்பிக்காக அண்ணனோ அதருமத்தில் பங்கு எடுப்பது சரியாகாது என்பது அவர்களுடைய முடிவாகும்.

ராமாயணத்தில் கும்பகர்ணனும் விபீஷணனும் இந்த இரண்டு பட்சத்திற்கும் சிறந்த விளக்கங்களாக அமைந்து நிற்கிறார்கள்.

"சீதையை அபகரிக்கலாம், வா. தண்டகாரண்யம் போவோம்" என்று ராவணன் எவ்வளவு வேண்டிக்கொண்டிருந்தாலும் விபீஷணன் போயிருப்பானா? போயிருக்க முடியுமா? போயிருந்தால் யாராவது விபீஷணனைப் புகழ்ந்திருப்பார்களா?

"இப்போதாவது சீதையைத் திருப்பிக் கொடு. க்ஷேமமாக இருப்பாய். ராமன் மன்னிப்பான். அதுவே தருமம்" என்று சொல்லிப் பார்த்தான். கேட்கவில்லை. உண்மையில் பாபத்தை வெறுக்கும் ஒரு ஆத்மாவுக்குப் பிடிவாத மூர்க்கத்தில் நின்ற ராவணனை விட்டு விலகுவதை விட வேறு வழியிருக்கவில்லை.

ஆகையால் விபீஷணனைக் குற்றம் சொல்லுவது தவறு. நமக்குள் தரும உணர்ச்சி ஓரளவு குறையாக இருப்பதாலேதான் குற்றம் சொல்லுவோம்.

ஆயினும் கும்பகர்ணனைக் குற்றம் சொல்லலாமா? அதுவும் முடியாது. ரத்த பாசத்தால் இழுக்கப்பட்டுத் தன் உயிரைத் தியாகம் செய்தான். அவ்வாறே மாரீசனும் செய்தான். கும்பகர்ணனைப் பழிக்க முடியாது என்பதால் விபீஷணன் செய்தது குற்றமாகாது. தருமத்துக்கு விரோதமாகவே பேசுவதில் சிலருக்கு இந்தக் காலத்தில் அதிக ருசியானபடியால் இந்த விஷயத்தை இங்கே இவ்வளவு நீட்டி எழுத வேண்டியதாயிற்று.

பாபம் செய்தால் நண்பர்களுடைய நட்பையும் சுற்றத்தாருடைய துணையையும் கட்டாயமாக இழப்போம் என்கிற பயம் மக்களுக்கு இருக்க வேண்டும். எப்படியாயினும் இவர்கள் நமக்குத் துணையாகவே இருப்பார்கள். கைவிட மாட்டார்கள் என்கிற தைரியத்தைக் கொடுத்து விட்டோமானால் உலகத்தில் பாபத்தைத் தடுப்பது மிக கஷ்டமாகும். சாதாரணமாகவே மக்களைப் பாபத்தில் இழுக்கும் வேகங்களுக்கு பலம் அதிகம். அதற்கு இந்தத் துணையும் சேர்ந்துவிட்டால் வெகு மோசமாகும். இதை நினைவில் வைத்துக் கொள்ளாமல் சிலர் வாதாடுகிறார்கள். "குலத் துரோகி!" என்று ராவணன் மட்டும் சொல்ல வில்லை. ராவணனுக்குப் பின் நம்மில் பலரும் விபீஷணனைக் குறித்து அவ்வாறே குறை சொல்லுகிறார்கள். முக்கியமாகத் தங்களுடைய தவறான முயற்சிகளுக்கு, தங்களுக்குச் சம்பந்தப்பட்டவர்களுடைய துணையை எப்படியாவது அடைய வேண்டும், அதற்கு இடைஞ்சல் ஏற்படக் கூடாது என்று விரும்புகிறவர்கள் எல்லாரும் விபீஷணனைப் பாவி என்றும் துரோகி என்றும் சொல்லுவது வழக்கம். 'குலத் துரோகி' என்கிற பழிச் சொல்லுக்குப் பயப்படாமல் விபீஷணன் அதருமத்தினின்று விலகினான். விலகிய பிறகும் விபீஷணன் பாடு கஷ்டமாகத்தான் இருந்தது. நடந்ததைக் கேளுங்கள்.

*　　*　　*

கடலின் வடக்குக் கரையில் நின்ற வானரத் தலைவர்கள் திடீர் என்று ஆகாயத்தில் ஒரு பிரகாசத்தைக் கண்டார்கள். பொன் முடி கொண்ட மேரு மலை போல் மேலே ஆகாய வீதியில் ஒரு ஜோதி ஜொலிப்பதைக் கண்டார்கள். மேகங்களினிடையில் மின்னும் மின்னல் மின்னின பிறகு மறைந்து போகாமல் அப்படியே ஆகாயத்தில் நின்ற மாதிரி ஜொலித்தது. பார்த்ததில் பெரு வடிவங்கள் கொண்ட ஐந்து ராக்ஷசர்கள் நிற்பதைக் கண்டார்கள். வானரப் படைத் தலைவனும் அரசனுமான சுக்ரீவன் இதைப் பார்த்துவிட்டு, "சந்தேகமேயில்லை. இந்த ராக்ஷசர்கள் எங்களைக் கொல்ல லங்கையிலிருந்து வந்திருக்கிறார்கள்" என்றான்.

அரசன் இவ்வாறு சொன்னதுமே வானர வீரர்கள் மரங்களும் பாறை

களும் எடுத்துக்கொண்டு யுத்தத்துக்கு ஆயத்தமாகி, "உத்தரவு கொடுங்கள். இவர்களை இப்போதே மடக்கி வதம் செய்து பூமியில் தள்ளுவோம்" என்று கர்ஜித்தார்கள்.

இப்படி வானரர்கள் தங்களுக்குள் பேசியும் கர்ஜித்துக் கொண்டும் வந்ததைக் கேட்ட விபீஷணன், பயக்குறி ஒன்றும் காட்டாமல் வஞ்சனையற்ற உள்ளத்தோடு மேலே அனைவருக்கும் தெரியும் படியாக நிலைகுலையாமல் நின்று கம்பீரக் குரலில் பேசலானான்:

"ராக்ஷசராஜன் ராவணன் என்கிற துஷ்டனுடைய தம்பியாகிய விபீஷணன் நான் நிற்கிறேன். தடுக்க வந்த ஜடாயுவையும் கொன்று சீதையை பலாத்காரமாகக் கொண்டு வந்து ராக்ஷசிகளின் காவலில் வைத்திருக்கும் ராவணனுடைய தம்பி நான். 'இந்த காரியம் தகாது, இவளை ராமனிடம் மறுபடியும் மரியாதையாக ஒப்புவித்து விட்டு மன்னிப்புக்கேட்பாயாக' என்று நான் பலவாறு வற்புறுத்தியும் அவனுடைய அழியும் காலம் நெருங்கி விட்டபடியால் நான் சொன்னதை அவன் ஒப்புக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக சபை நடுவில் என்னை ஒரு வேலைக்கார அடிமையைக் காட்டிலும் மட்டமாகக் கருதித் திட்டி அவமானப் படுத்தினான். ஆனபடியால் இதோவந்து நிற்கிறேன். நாடு, நகரம், மனைவி, மக்கள் அனைத்தையும் துறந்து விட்டு ராகவனைச் சரண் அடைய வந்து நிற்கிறேன். இதைச் சீக்கிரம் இருமகள் கேள்வனுக்குத் தெரியப்படுத்தி என்னை அனுக்கிரகிப்பீர்களாக" என்றான்.

உடனே சுக்ரீவன் ராமனிடம் சென்று சொன்னான்:

"ராவணனுடைய தம்பி விபீஷணன் மற்றும் நான்கு ராக்ஷசர்களுடன் வந்து தங்களைச் சரணமடைய விரும்புகிறான். ஆகாயத்தில் நிற்கிறார்கள். இதைப் பற்றி நீதி சாஸ்திரமறிந்த தாங்கள் நன்றாக ஆராய வேண்டும். இந்த அரக்கர்கள் பல வேஷங்கள் போடுவார்கள். கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தும் வேலை செய்வார்கள். துஷ்டர்களுக்குரிய எல்லா சாமர்த்தியமும் தைரியமும் பெற்றவர்கள். இவர்களை நம்பவே கூடாது. இவர்களை ராக்ஷச ராஜனான ராவணன் அனுப்பியிருக்கிறான் என்றே நான் எண்ணுகிறேன். நமக்குள் புகுந்து நம் ஒற்றுமையைக் கலைத்து விடுவதற்காக வந்திருக்கிறார்கள். அல்லது சமயம் பார்த்து நமக்குள் முக்கியஸ்தர்களைக் கொன்று விட்டுத் திரும்புவார்கள். இந்த விபீஷணன் என்ன பேசினாலும் இவன் நம்முடைய பரம சத்துருவின் சொந்தத் தம்பி என்பதை நாம் மறக்கக் கூடாது. பிறப்பில் துஷ்டப் பிறப்பான ராக்ஷச ஜன்மம். இவனை நாம் எப்படி நம்பலாம்? இது ராவணனுடைய சூழ்ச்சியே. சந்தேகமில்லை. இவனையும் இவன் துணைவர்களையும் வதம் செய்வதே நலம். இவனை நமக்குள் சேர்த்துக் கொண்டோமானால் சமயம் பார்த்து நம்மை வஞ்சிப்பான். நம்மை அழித்து விட்டுத் திரும்புவான். துஷ்டனும் தயையில்லாதவனுமான ராவணனுடைய தம்பியாகிய இந்த அரக்கனையும் இவன் கூட வந்திருக்கும் துணையாட்களையும் உடனே வதம் செய்ய உத்தரவு தாருங்கள்."

அரக்கனைக் கண்டு ரோஷம் மேலிட்டு சுக்ரீவன் இப்படித் தன் அபிப்பிராயத்தை மறைக்காமல் தெரி



யப் படுத்தி விட்டு ராமனுடைய உத்தரவை எதிர்பார்த்து நின்றான்.

வானர ராஜன் சொன்ன வார்த்தையைக் கேட்ட ராமசந்திரன், பக்கத்தில் நின்ற ஹனுமான் முதலிய வானர சிரேஷ்டர்களைப் பார்த்து, "நீதி சாஸ்திரம் அறிந்த அரசன் சொன்னதையெல்லாம் கேட்டீர்கள். ராவணனுடைய தம்பி வந்து நிற்கிறான். அவனைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தையும் கேட்க விரும்புகிறேன். நெருக்கடியான சமயங்களில் நண்பர்கள் சுற்றத்தார் இவர்களுடைய யோசனை மிகவும் முக்கியம். உள்ளத்தில் தோன்றுவது போல் கூச்சமின்றிச் சொல்லுங்கள்" என்றான்.

அவ்வாறே ஒவ்வொருவரும் தத்தம் அபிப்பிராயத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

**வா**னர யுவராஜனான அங்கதன் சொன்னான்: "இவன் நம்முடைய பகைவர் கூட்டத்திலிருந்து வந்திருக்கிறான். தானாக வந்தானோ பகைவனால் அனுப்பப்பட்டு வந்தானோ நமக்குத் தெரியாது. இவனைத் தள்ளி விடுவதும் நியாயமாகாது. பரீட்சை செய்யாமல் சேர்த்துக் கொள்ளுவதும் நம்முடைய க்ஷேமத்துக்கு அபாயம் உண்டாக்கலாம். ஆனபடியால் இவனைப் பற்றித் தீர்மானமான முடிவுக்கு உடனே வர முடியாது. வரவேண்டியதுமில்லை. எப்படி நடந்து கொள்ளுகிறானே பார்க்கலாம். இவன் காரியங்கள் நமக்குச் சந்தேகம்உண்டாக்கினால் பிறகு



தள்ளி விடலாம். நல்ல எண்ணமே அதிகமாகக் காணப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம்."

இவ்வாறு வாலி புத்திரன் அங்கதன் சொன்னான்.

சரபன் சொன்னான் : "இவனை நமக்குள் உடனே சேர்த்துக்கொண்டு விட்டுப் பிறகு தீர்மானிப்பது அவ்வளவு க்ஷேமம் என்று நான் அபிப்பிராயப் படவில்லை. முதலிலேயே நமக்குள் சாமர்த்தியசாலிகளான சாரர்களை விட்டு இவனைப் பரீக்ஷை செய்து விட்டு ஒரு முடிவுக்கு வந்து விடுவது நலம்" என்றான்.

ஜாம்பவான் சொன்னான் : "இத்தகையவர்களைப் பரீக்ஷை செய்வதால் ஒன்றும் வெளிப்படாது. மனத்தில் உள்ள கருத்தை மறைத்துக் கொண்டு வஞ்சக எண்ணத்தோடு இவன் வந்திருந்தால் பரீக்ஷை செய்து அதைக் கண்டு பிடிப்பது முடியாத காரியம். ராவணன் நமக்குத் தீராத பகைவன். அவனை விட்டு விட்டுத் திடீர் என்று வந்து விட்டதாக இவன் சொல்லுகிறான். இதை நாம் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? நாம் இன்னும் சமுத்திரம் தாண்டவில்லை. இக்கரையிலிருக்கும்போதே இவன் நம்மிடம் வந்து சரண் புகுவதற்கு என்ன காரணம்? இது ரொம்பவும் சந்தேகத்துக்கு இடம் தருகிறது. இவனுடைய கூட்டம் வஞ்சகக் கூட்டம். இவனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்பது என் அபிப்பிராயம்" என்றான்.

மைந்தன் சொன்னான் : "சந்தேகத்தின் பேரிலேயே ஒருவனைத் தள்ளிவிடலாமா? இவனை யுக்தியாகப் பரீக்ஷை செய்தே இவனைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும். ராவணனைத் துறந்து விட்டு வந்திருப்பதாகச் சொல்லுகிறான். இதன் உண்மையை நாம் காண முடியும். இவனுடன் சிலர் பேசிப் பார்த்து முடிவு செய்யலாம். இதற்கு வேண்டிய சாமர்த்தியம் நம்முள் சிலருக்கு இல்லாமற் போகவில்லை."

பிறகு ராமன் அறிவுச் செல்வமாகிய ஹனுமானைப் பார்த்தான்

அட்டைப் படம்

## ஆனந்த சுதந்திரத்தின் அருமை காண்போம்!

என். எஸ். சிதம்பரம்

சுதந்திரமாம் சூரியனும் சுடரை வீசச்
சூழ்ந்திருந்த அருமையிருட் சோகம் நீங்கி
இதம்நிறைந்த பாரதத்தாய் இதயம் பூத்தே
எந்நாடும் மதிக்கின்ற ஏற்றம் கண்டாள்!

ஏற்றமதைக் காணலுற்ற இன்பாலே
எண்ணிமிக அன்னைதிறம் இசைத்து நிற்போம்!
போற்றுகின்ற சுதந்திரத்தின் புனிதநாளைப்
புவிமீதில் கொண்டாடிப் புகழ்வளர்ப்போம்!

அன்னையவள் பூண்டிருந்த அடிமை நீக்க
அருந்தியாகம் புரிந்திட்டோர் ஆற்றல் பாடி
இன்னமுத அவர்பாதம் ஏற்றிப் போற்றி
இறைஞ்சிடுவோம் இறையன்பால் இனிதுதானே!

உற்றபெருஞ் சுதந்திரத்தை உணர்த்தும் நாள்போல்
உயர்நாளும் திருநாளும் உலகில் உண்டோ?
அற்றதிடர் என்றிசைத்தே அந்நாள் பெற்ற
ஆனந்த சுதந்திரத்தின் அருமை காண்போம்!

# West End 'IND' ALARM




you cannot buy a Better Timepiece!

Rs. 21

ஒரு முறை சாவி கொடுத்தால் 30 மணி நேரம் ஓடும் இக் கடிகாரம் உறுதியான பித்தளைத் தகட்டில் செய்யப்பட்டது. நல்ல கனமான பித்தளை சக்கரங்கள். அச்சுகளும் முனைகளும் இடமான எஃகுத் தகட்டில் கடைந்தெடுத்தது. இடைவிடாது நீண்ட நேரம் அடிக்கும் அலாரம். பளபளப்பான நிக்கல் கேஸ். அகலம் 3 7/8"—உயரம் 4¼". சாதா வெண்ணிற டயலுடன் ரூ. 21/-, ரேடியம் டயல் ரூ. 2/- தனி.

நல்ல பொருள்களைக் கொண்டு சிறந்த வேலைப் பாட்டிலே உருவாயெதுதான் வெஸ்ட் எண்ட் "இண்ட்" அலாரம் கடிகாரம். கெடியார ஓட்டத்திலுள்ள ஒவ்வொரு அம்சமும், அலார அமைப்பும், கேஸும் மிகச் சிறந்தது. இதை வாங்குபவர்களுக்கு எத்தகைய தொந்தரவோ ஏமாற்றமோ கொடுக்காது. கெடியாரங்களிலே மிகவும் சிறந்ததாக வெஸ்ட் எண்ட் "இண்ட்" கெடியாரம் இருப்பதால், பல வருஷங்கள் நீடித்து திருப்திகரமாக உழைக்க நிச்சயமாக நம்பலாம்.

விவரங்களடங்கிய இலவச காட்லாக்கிற்கு எழுதவும்

**WEST END WATCH CO.,**
BOMBAY CALCUTTA

# வட இந்திய யாத்திரை




## காத்திமா

மனிதன் தன் வாழ்க்கையில் எல்லாவற்றையும்விடப் பெரும் பேறாகக் கருதுவது கண் பார்வை. அந்தக் கண்ணினும் இனியது சுதந்திரம். உலகத்தில் அவதரித்த எத்தனையோ பெரியார்கள் சுதந்திரத்தின் பெருமையை நமக்கு அறிவுறுத்தியிருக்கிறார்கள்.

நாட்டின் சுதந்திரத்துக்காகச் சகல தியாகங்களையும் செய்து முடிவாக உயிர்த் தியாகம் செய்த மகா புருஷர்கள் உலக சரித்திரத்தில் எத்தனையோ பேர் உண்டு. அத்தகைய பெறுதற்கரிய பேறாகிய சுதந்திரத்தை எத்தனையோ பல நூறு ஆண்டுகளுக்குப் பிறகு எண்ணரிய தியாகங்கள் செய்து நாம் பெற்றிருக்கிறோம். பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்ப்பதற்காகத் தலைவர் நேருஜி முதலியவர்கள் இரவு பகலாகப் பாடுபட்டு வருகிறார்கள்.

நாம் சுதந்திரம் பெற்ற எட்டு ஆண்டுகளுக்குள்ளாக உலகம் வியக்கும் எத்தனையோ அரியபெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறோம். அப்படிப்பட்ட சாதனைகளில் ஒன்றான காதிமா ஜல மின்சார நிலையத்துக்குத்தான் சூப்பரின்டென்டிங் இன்ஜினீயர் திரு ஓ. பி. குப்தா பத்திரிகை நிருபர்களை அழைத்துச் சென்றார்.

** ** **

சாரதா கால்வாய் உற்பத்தியாகும் பன்பாஸா அணையிலிருந்து காத்திமா ஜல மின்சார நிலையம் எட்டு மைல் தூரம் இருக்கிறது. போகும்போது எந்த வழியாகச் சென்றோமோ அதே வழியாகத்தான் திரும்பி வந்தோம். ஆனால் போகும் போது பார்த்த அதே இயற்கைக் காட்சிகள் வரும்போது இன்னும் புதுமையாக விளங்கின. அடடா! எவ்வளவு வளமான நாடு! நீர் வளத்தில் இணையில்லாத நாடு என்று எண்ணி வியக்கும்படி இருந்தது. சாரதா கால்வாயில் அடிக்கடி பல ஆறுகளும் வாய்க்கால்களும் குறுக்கிட்டன. அவற்றை லட்சியம் செய்யாமல் சென்றோம். சிறிதும் அஞ்சாமல் தைரியமாக அந்தப் பாலங்களின் மீது சென்றோம். "ஓஹோ! பாலத்தின் மீது போவதற்குத் தைரியம் வேறாயா!" என்று கேட்கலாம். சாரதா கால்வாயில் குறுக்கிடும் பாலங்களின் மீது நின்று பார்த்தால் இந்தக் கேள்வி கேட்கத் தோன்றாது.

சாரதா கால்வாய் பல இடங்களில் குறுக்கே வரும் காட்டாற்றுக்கு அடியில் புகுந்து போகிறது. சில இடங்களில் மேலே செல்கிறது. சில இடங்களில் தன்னோடு வரும் ஆற்றோடு சேர்ந்து குலாவி விட்டு வருகிறது. இந்த இடங்களில் எல்லாம் நமது இன்ஜினீயர்களின் திறமை அதிசயமானது. ஏதோ மந்திர சக்தியால் கண்கட்டி வித்தை காட்டுவது போல இருக்கிறது. சாரதா கால்வாய் திடீரென்று மறைந்து விடுகிறது. குறுக்கே பெரிய காட்டு ஆறு ஓடுகிறது. ஆற்றுக்கு அப்பால் சாரதா மீண்டும் மேலே வந்து பழையபடி ஓடுகிறது. இதுபோன்ற இன்ஜினீயரிங் வித்தையைப் போற்றாமல் இருக்க முடியாது. அந்த இடங்களில் எல்லாம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டுதான் செல்ல வேண்டும். இல்லாவிட்டால் நம்மை யறியாமலே தலைசுற்றிக் காட்டாற்றில் 'தொபுகடீர்' என்று விழ வேண்டியதுதான். இதற்கு அஞ்சாத நெஞ்சம் அவசியம் வேண்டியதுதானே!

சாரதா கால்வாய்க்குத் தனியான ஒரு இயல்பு உண்டு. அடிக்கு அடி, வேறு வேறு

உருவத்தில் செல்கிறது. சில இடங்களில் அமைதியாக வருகிறது. சில இடங்களில் காலில் சலங்கையைக் கட்டிக் கொண்டு 'ஜல் ஜல்' என்ற ஓசையோடு குதிபோட்டுக்கொண்டு வருகிறது. சில இடங்களில் மிகுந்த கோபத்துடன் நர்த்தனம் செய்து கொண்டு வருகிறது! இந்தக் காட்சிகளை எல்லாம் பார்த்துக்கொண்டு காதிமா போய்ச் சேர்ந்தோம். சூப்பரின்டென்டிங் இன்ஜினீயர் திரு ஓ. பி. குப்தா "இதுதான் காதிமா ஜல மின்சார நிலையம்" என்று ஒரு பெரிய கட்டடத்தையும் அதையொட்டி மின்சாரம் செல்லும் பெரிய பெரிய கம்பங்கள் நிறைந்த கூடம் இருந்த இடத்தையும் காண்பித்தார்.

**உ**த்தரப்பிரதேசத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் காலத்தில் மின்சாரமே இல்லை யென்று சொல்லி விடலாம். சில இடங்களில் மட்டும் தனிப்பட்ட முதலாளிகள் மின்சாரம் உற்பத்தி செய்து சில வீடுகளுக்கு மின்சாரம் கொடுத்து வந்தார்கள். நமது சுதந்திர சர்க்கார் சென்ற ஐந்தாண்டுத் திட்டத்தில் காதிமா ஜல மின்சார நிலையத்தை அமைத்து உத்தரப் பிரதேசத்தில் உள்ள பதினொரு ஜில்லாக்களிலும் வீடு வீடாக மின்சார விளக்கு எரிவதற்கு வேண்டிய வசதிகள் செய்திருக்கிறார்கள்.

காதிமா ஜல மின்சாரத் திட்டத்தால் உத்தரப்பிரதேசத்துக்கு வேண்டிய மின்சாரத் தேவை பூர்த்தி ஆகிவிடுகிறது. அத்துடன்

# ஜல மின்சார நிலையம்

கங்கைக் கால்வாய் ஜல மின்சார நிலையத்தில் இருக்கும் மின்சாரப் பற்றாக் குறையையும் பூர்த்தி செய்து விடுகிறது. இதனால் தேசிய முன்னேற்றத்துக்கான பல தொழில்கள் வளரும். அவைகளுக்கு வேண்டிய மின்சாரம் தடங்கல் இல்லாமல் தாராளமாகக் கிடைக்கும்.

புதிய சாரதா ஆற்றில் இயற்கையிலேயே ஒரு அதிசயம் இருக்கிறது. பன்பஸாவிலிருந்து எட்டு மைல் காட்டுக்கு மத்தியில் சாரதா தன்னந்தனியே ஓடி வருகிறாள். வரும்போது அருவிபோல் விழுந்து விழுந்து வருகிறாள். இந்தமாதிரி பதினொரு இடங்களில் இரண்டரை அடியிலிருந்து ஐந்தடி வரையில் சாரதா அருவியாக விழுகிறாள்! இந்த அருவிகளை எல்லாம் சேர்ப்பதற்காகப் புதிய சாரதா ஆற்றிலிருந்து பதினொரு மைல் அர்த்த சந்திர வடிவமாக மற்றொரு கால்வாய் வெட்டியிருக்கிறார்கள். பிறகு அதையே மீண்டும் சாரதா நதியில் கொண்டு சேர்த்திருக்கிறார்கள். இந்தப் புதிய கால்வாயின் உதவியால் சாரதா ஆற்றில் உள்ள பதினேழு சிறு சிறு அருவிகளையும் காதிமா என்ற இடத்தில் ஒன்று சேர்த்திருக்கிறார்கள். நவீன இன்ஜினீயரிங் திறமையால் உண்டாக்கிய இந்தச்செயற்கை அருவியின் உயரம் ஐம்பத்தொன்பதடியாகும். இந்த அருவி விழும் இடத்தில்தான் ஜல மின்சார நிலையம் கட்டி மின்சாரம் உற்பத்தி செய்கிறார்கள். மனிதன் கண்ட அற்புத சாதனை இது!

**மி**ன்சார நிலையம் கட்டுவதற்குத் தேர்ந்தெடுத்திருக்கும் இடம் மிக அழகான இடம். நாற்புறமும் அடர்த்தியான சால், சிசு மரக் காடுகள். அந்தக் காடுகளுக்குப் பின்னால் வானோங்கி நிற்கும் பெரிய மலைகளின் தோற்றம். அதற்கும் அப்பால் நீலவானம். இதே போல் நாலு புறமும் இருக்கிறது. இப்படிப்பட்ட அருமையான இயற்கைச் சூழ்நிலையில் காதிமா மின்சார நிலையம் அமைந்திருக்கிறது.

பொதுவாக அந்தக் காட்டுக்கு மத்தியில் எந்தக் காரியத்தில் ஈடுபட்டாலும் பெரிய சோதனைதான் போலிருக்கிறது. மின்சார நிலையக் கட்டடத்துக்கு அஸ்திவாரம் போடுவதே பெரிய பிரயத்தனம் ஆகிவிட்டதாம். ஒரு அடிகூட பூமியைத் தோண்டி அஸ்திவாரம் போட முடியாதபடி பூமி மோசமாக இருந்ததாம். எத்தனையோ வழிகளைக் கையாண்டு பார்த்தும் அஸ்திவாரமே போட முடியாமல் இன்ஜினீயர்கள் திணறி விட்டார்களாம். அஸ்திவாரம் போடும் முயற்சியில் ஈடுபட்டுப் பலன் கிடைக்காமல் போகவே இந்த மின்சார நிலையம் கட்டுவதையே கை விட்டு விடலாமா





1. சாரதா கால்வாய் உற்பத்தியாகும் இடம்.
2. காதிமா ஜல மின்சார நிலையத்திற்குச் செல்லும் கால்வாய். தண்ணீருடன் மரம் மட்டைகள் செல்லாமல் சலித்து எடுக்கும் சல்லடை...
3. காதிமா மின்சார நிலையத்தின் தோற்றம்.

என்று கூட ஒரு சமயம் அதிகாரிகள் முடிவு செய்து விட்டார்களாம். பழைய காலத்தில் வேண்டாத காரியங்களில் எல்லாம் சடுபட்டுப் பொதுப் பணம் பாழாய்ப் போயிருப்பதை நாம் அறிந்துதான் இருக்கிறோம். சுதந்திர இந்தியாவில் அந்தமாதிரி யெல்லாம் நடவாமல் இருக்க வேண்டுமே என்று தலைவர்கள் கவலைப்படுவது போலவே அங்குள்ள அதிகாரிகளும் கவலைப்பட்டிருக்கிறார்கள்.

எடுத்த காரியத்தை முடித்துவிடுவது என்று தீர்மானித்தார்கள். ஜல மின்சார நிலையக் கட்டடம் அஸ்திவாரம் போடும் இடத்தில் இருக்கும் இடைஞ்சலைக் கண்டு பிடித்தார்கள். பூமிக்குச் சில அடி ஆழத்திலேயே ஏராளமாகத் தண்ணீர் சுரந்து அஸ்திவாரம் போட முடியாமல் செய்து வந்ததை உணர்ந்தார்கள். அதற்காகப் பல இடங்களில் நெருக்கமாகக் குழாய்க் கிணறுகள் இறக்கி இரவு, பகல் இருபத்திநாலு மணி நேரமும் பூமியில் இருந்து சுரக்கும் தண்ணீரை இறைக்கச் செய்தார்கள்.

இவ்வாறு இரண்டு ஆண்டுகள் இடைவிடாமல் செய்ததால் அந்தப் பக்கத்தில் பூமிக்கு அடியில் இருந்த ஊற்றுக் கண்கள் தூர்ந்து தண்ணீர் சுரப்பது நின்றது. இரண்டு ஆண்டு இடைவிடாப் போராட்டத்துக்குப் பின் மனித சக்தி வெற்றி கொண்டது. பூமி கொஞ்சம் நல்ல நிலைமைக்கு வந்தது. அதைப் பயன்படுத்திக் கொண்டு பலமான அஸ்திவாரம் போட்டு மின்சார நிலையத்தை அமைத்திருக்கிறார்கள்.

நூற்று இருபத்தைந்து அடி உயரமுள்ள அந்த மின்சார நிலையக் கட்டடத்தின் உச்சியில் இருந்து சூப்பரின்டென்டிங் இன்ஜினீயர் மின்சாரநிலையம் சம்பந்தமான மற்ற விவரங்களைச் சொன்னார். மொத்தம் அந்த நிலையத்தில் 41,400 கிலோவாட்ஸ் மின்சாரம் உற்பத்தியாகும். மின்சார நிலையத்துக்குள் மின்சாரம் உற்பத்தி செய்வதற்காக வைத்திருக்கும் இன்ஜின்கள் மூன்று. அந்த இன்ஜின்கள் எல்லாம் மிகவும் உயர்தரமானவை, நீண்ட காலம் உழைக்கும் சக்தியுடையவை. ஒவ்வொன்றும் 19,200 குதிரை வேகம் கொண்டது. நிமிஷத்துக்கு 3,167 கன அடி தண்ணீரை நிலையத்திலிருந்து அறுபது அடிக்கு அப்பால் கொண்டு தள்ளும் சக்தியுடையது.

சாரதா நதி இதர நதிகளைவிட அதிக வேகமும் அதிக தண்ணீரும் கொண்டதாக இருப்பதால் 59 அடி உயர அருவியிலேயே 41 ஆயிரம் கிலோவாட்ஸுக்கு மேல் மின்சாரம் உற்பத்தி செய்ய முடிகிறது. இதில் உற்பத்தியாகும் மின்சாரம் உத்தரப் பிரதேசம் பூராவுக்கும் கிடைக்கும். வீட்டு விளக்குகளுக்கு உபயோகமாவதுடன், சிறு கைத்தொழில்கள், போக்குவரத்துக்குச் சௌகர்யமான மின்சார ரயில் விடுதல், மேட்டுப்பாங்கான இடங்களுக்கு மின்சார உதவியால் தண்ணீர் பாய்ச்சுவது, குழாய்க் கிணறுகள் அமைப்பது, உர உற்பத்தி நிலையங்கள் அமைப்பதற்கு மின்சாரம் உபயோகிப்பது முதலிய பல தேச முன்னேற்றமான காரியங்களுக்கும் பயன்படும். இதனால் இன்னும் பல ஆயிரம் ஏக்கரா நிலங்களில் நெற்பயிரோ, கோதுமைப் பயிரோ செய்யக் கூடும். இன்னும் சில இடங்களில் சோளமும், கரும்பும் பயிரிடலாம்.

இந்த விவரங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டோம். என்ன தெரிந்து கொண்டாலும் இந்தப் புள்ளி விவரங்களைக் குறித்து எடுத்துக் கொண்டு வந்து வாசகர்களுக்குச் சொல்வது கஷ்டம்தான். அதைவிடக் கஷ்டம் வாசகர்கள் பொறுமையைச் சோதிப்பதாகும். இருந்தாலும் எந்த மேல்நாட்டு இன்ஜினீயர்களின் உதவியும் இல்லாமல் நமது நாட்டு இன்ஜினீயர்களே 'பிளான்' போட்டு அமைத்து வெற்றி கொண்டது இந்த காதிமா ஜல மின்சார நிலையம் என்பதை மறந்து விடக் கூடாது.

ஆகா! அந்த மகத்தான மின்சார நிலையத்தையும் அதைச் சுற்றியுள்ள காடுகளையும் பார்க்கப் பார்க்கக் கழுத்தைத்தான் வலி எடுக்கிறது! எவ்வளவு உயரம், எவ்வளவு அகலம், எத்தனை பெரிய மின்சார நிலையக் கட்டடம்! இது நின்று முளைத்து விடுமா! ஐந்து ஆண்டுகளில் இதைக் கட்டி யிருக்கலாம். ஆனால் இதற்கு முன் எத்தனை வருட காலம் இன்ஜினீயர்கள்

உள்ளத்தில் இது கட்டப்பட்டு வந்ததோ; யாருக்குத் தெரியும்!

அந்த இன்ஜினீயர்கள் உள்ளத்தைப் போலவே இதற்கு ஊக்கமளித்த நமது தலைவர்களின் உள்ளமும் எவ்வளவு பெரிதாயிருக்க வேண்டும். நமது தலைவர்கள் விஷயங்கள் எல்லாமே பெரியவைதான். அதுபோல அங்குள்ள சாரதா ஆறு, அதை யொட்டி அமைந்துள்ள சாரதா சாகரம், காதிமா மின்சார நிலையம் எல்லாமே பெரியவைகள்தான். உத்தரப் பிரதேசத்துத் தலைவர்கள் பெரிய மனது படைத்தவர்களாயிருந்து, இதுபோன்ற பெருஞ் செயல்களைப் புரிந்திருக்கிறார்கள். உத்தரப் பிரதேசத்தின் செழுமையில் தமிழ் நாட்டவராகிய நமக்கும் பங்குண்டல்லவா!

இந்த ஜல மின்சார நிலையத்தில் இன்னொரு விசேஷப் பெருமையும் இருக்கிறது. ஆற்றுத் தண்ணீரைக் குழாய் மூலம் மின்சார இன்ஜினுக்குக் கொண்டு போவதற்குப் பொதுவாக இரும்புக் குழாய்கள்தான் உபயோகிப்பார்கள். அந்த இரும்புக் குழாய்களும் வெளி நாட்டிலிருந்துதான் வர வேண்டும். அதற்குச் சில ஆண்டுகள் பிடிக்கும். அந்தமாதிரித் தொல்லைகளுக்கெல்லாம் இடம் வைத்துக் கொள்ளாமல் நம் நாட்டிலேயே தயாராகும் சிமெண்டைக் கொண்டு, மேல் நாட்டிலிருந்து வரும் இரும்புக் குழாயை விட பலம் பொருந்தியதாகச் செய்து உபயோகப் படுத்தியிருக்கிறார்கள். இது நாம் எல்லாம் பெருமைப்பட வேண்டிய காரியமல்லவா! இந்த விவரங்களைச் சொல்லும்போது சூப்பரின்டெண்டிங் இன்ஜினீயர் மிகுந்த உற்சாகத்தோடு விளக்கினார்.

ஒன்றின்மேல் ஒன்றாக இன்ஜினீயர் சொல்லி வந்த செய்திகள் திகைப்படையச் செய்வதாயிருந்தன. "ஐயா! இனிமேல் இப்படி அதிசயமான செய்தி சொன்னீர்களோ பிறகு எங்கள் மீது தப்பு சொல்லாதீர்கள். நிச்சயமாக மூர்ச்சையாகிச் சாரதா நதியில் விழுந்து விடுவோம்" என்று அவரை ஒரு உற்சாகமுள்ள பத்திரிகை நிருபர் எச்சரித்தார்.



இந்தச் சமயத்தில் அங்கு திடீர் என்று தோன்றிய ஒரு ஜீவனைப் பார்த்துத் திடுக்கிட்டு நின்றேன். அது வேறு யாருமில்லை. அந்தப் பக்கத்து மனிதர்களையே கதி கலங்கச் செய்து கொண்டிருக்கும் திருவாளர் கொசுவார்தான். அவர் தம்முடைய விஷ ஊசியை ஜோடியாக நீட்டிக் கொண்டு கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். கொசுவின் திருவிளையாடல்களைப் பற்றி நாங்கள் கேட்ட விவரங்களெல்லாம் உண்மைதானா என்று அதையே கேட்டு விடுவது என்று தீர்மானித்தேன்.

"கொசுவாரே! கொசுவாரே! உம்முடைய திருவிளையாடலினால் எண்ணற்ற மக்கள் உயிர்த் தியாகம் செய்யும்படி நேரிட்டு விட்டதாமே! இப்பொழுது பத்திரிகையாளரையும் ஒரு கை பார்த்து விடுவது என்று வந்தீரோ!" என்று கேட்டேன்.

"அதெல்லாம் அந்தக் காலம். இப்பொழுது எங்கள் கூட்டத்தின் கொட்டத்தையே அடக்கி விட்டார்கள். நாங்களும் காந்தி மகான் வழியைக் கடைப்பிடித்து அஹிம்ஸாவாதிகளாகி விட்டோம்" என்றது கொசு.

"அப்படியானால் இப்பொழுது எங்கு வந்தாய்!" என்றேன்.

"எங்கள் மூதாதையர் செய்த கொடுமைகளைப் பற்றியெல்லாம் சொல்லியிருப்பார்கள். நாங்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. மிகுந்த சாதுக்களாகி விட்டோம். இருந்தாலும் இந்த வட்டாரத்தில் உள்ள தனி விசேஷம் எங்கள் வம்சம் அழிந்து போகாதபடி இயற்கைச் சூழ்நிலை இருக்கிறது. அதைச் சொல்லுவதற்காகவே வந்தேன்" என்றது கொசு.

இவ்வாறு கொசு சொல்லி முடித்ததும் ஒரே வியப்பாயிருந்தது. காரணம் அதன் குரல் மிகவும் பழகிய குரலாக இருந்தது. எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. "சாரதா நதிக் கரையின் கொசு இவ்வளவு நிதானமாகவும் நாசுக்காகவும் பேசுகிறதே! இது என்ன வேடிக்கை!" என்று இன்ஜினீயரைக் கேட்கலாம் என்று பார்த்தேன். அவர் என் மீது உட்கார்ந்திருந்த அந்தப் பெரிய கொசுவைப் பிடித்து நசுக்கிக் கொண்டிருந்தார். இது வரையில் பேசியதும் இன்ஜினீயர் குரல்தான் என்ற உண்மையும் தெரிந்தது.

யார் இந்தத் திறமைசாலியான இன்ஜினீயர் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா! இதோ சொல்லி விடுகிறேன்.

சூப்பரின்டெண்டிங் இன்ஜினீயர் திரு ஓம் பிரகாஷ் குப்தா நமது கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசாவின் மாப்பிள்ளை. தங்கமான குணம் படைத்தவர். தமக்குக் கீழே வேலை செய்யும் உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள் தொழிலாளர்கள் எல்லாரையும் பாராட்டிக் கொண்டே இருந்தார். சென்னையிலிருந்து வந்திருந்த பத்திரிகை நிருபர்களை மாமனார் வீட்டு விருந்தினராகவே மதித்து உபசரித்தார். ஒவ்வொரு சென்னைப் பத்திரிகையாளரையும் கூர்ந்து பார்த்தார். "நீங்கள் எந்தப் பத்திரிகையிலிருந்து வருகிறீர்!" என்று கேட்டார்.

"'கல்கி'யிலிருந்து வருகிறேன்" என்றதும், "ஆஹா! ராஜாஜி தொடர்ந்து எழுதும் பாக்கியம் பெற்ற பத்திரிகையிலிருந்து வருகிறீர்களா!" என்று சொல்லிக் கொண்டே இரண்டு கைகளையும் பிடித்துப் பலமாகக் குலுக்க ஆரம்பித்து விட்டார். அவருடைய உற்சாகம் என் கைகளைச் சற்று வலிக்கத்தான் செய்தது. ஆயினும் "ராஜாஜிமீது இவருக்கு எவ்வளவு மரியாதை!" என்ற எண்ணம் ஆழ்ந்து பதிந்தது.

கடைசியாக அவரிடம் விடைபெற்றுக் கொள்ள முயன்றபோது, "சாரதா சாகரைப்

---



சமீபத்தில் ரெக்ஸோனு சோப் கம்பெனியார் நடத்திய போட்டியில் ரூ. 10,000 பரிசுபெற்ற திருவிதாங்கூர் கொச்சி ராஜ்யத்தைச் சேர்ந்த திரு அந்தோனி நாச்சில் அவர்களுக்கு ஜூலை 24ம் தேதி சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் சுதேசமித்திரன் ஆசிரியர் திரு ஸி. ஆர். சீனிவாசன் அவர்கள் தலைமையில் 'மிஸ் ரெக்ஸோனு'வினல் பரிசு வழங்கப்பட்டது. மேலே படத்தில் மிஸ் ரெக்ஸோனு, திரு ஸி.ஆர்.சீனிவாசன், திரு நாச்சில் முதலியவர்களைக் காணலாம்.

---

பார்க்க வேண்டாமா!" என்று கேட்டு அதைப் பற்றி விளக்கிக் கூற ஆரம்பித்து விட்டார்.

### சாரதா சாகரம்

ஹிமாலயாவுக்கு இன்னும் கொஞ்ச தூரத்துக்கு அப்பால் சாரதா ஆற்றில் பூரைன்காட் என்னும் இடத்தில் சாரதாசாகர் கட்டி வருகிறார்கள். சாரதா நதியின் மேற்குப் பக்கத்தில் இயற்கையாகவே மிக நீளமான மலை அமைந்திருக்கிறது. அதற்கு எதிரில்தான் அணை கட்டுகிறார்கள். மொத்த அணைக்கட்டின் நீளம் பதினொன்றரை மைல். அந்த அணை மண்ணைக் கொண்டே கட்டப்படுகிறது. அணையின் அடிப் பகுதி மிகுந்த பலத்துடன் நவீன விஞ்ஞான முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அணையின் உயரம் 15 அடியில் இருந்து 36 அடி வரையில் இருக்கிறது. அந்த சாகரத்தில் 3,60,000 ஏக்கர் அடி தண்ணீரைத் தேக்கலாம். தேங்கும் தண்ணீரின் மேல் பரப்பு 25 சதுர மைல் இருக்கும். மொத்தம் 845 மைல் நீளமுள்ள கால்வாய்கள் வெட்டியிருக்கிறார்கள். அவற்றின் மூலமாகச் சுமார் இரண்டு லட்சம் ஏக்ரா நிலம் சாகுபடிக்குக் கொண்டு வரலாம். ஏராளமான மீன்கள் வளர்க்கலாம். அதனால் உணவுப் பஞ்சத்தைப் போக்கலாம். சாரதா நதியில் தண்ணீர் தேங்க ஆரம்பித்து விட்டால் ஒரே சமுத்திரம் மாதிரி இருக்கும். அங்கு சமுத்திரம் இல்லாத குறை கூடத் தீர்ந்து போய் விடும். விடுமுறை காலங்களில் உத்தியோகஸ்தர்களுக்கும், சாதாரண காலங்களில் யாத்திரீகர்களுக்கும் உல்லாசமான பொழுது போக்கும் இடமாகத் திகழும். மொத்தத்தில் இந்த சாரதா சாகரத்தால் உத்தரப் பிரதேசத்தின் மதிப்பே உயர்ந்து விடும். இதைக் கட்டி முடிப்பதற்கு 374 லட்ச ரூபாய் செலவாகும்.

சாரதா ஆறு ஜீவ நதிதான். அதில் வருஷம் பூராவும் தண்ணீர் வருகிறது. ஆனாலும் மழைக் காலத்தில் வேண்டிய அளவு தண்ணீர் வருவதில்லை. காரணம் பனியினால் உறைந்து தண்ணீர் குறைவாக வருகிறது. கோடை காலத்தில் பனி உருகி ஏராளமான வெள்ளம் வந்து அந்தத் தண்ணீர் ஒன்றுக்கும் உபயோகமில்லாமல் வீண் விரயமாகி வருகிறது. அந்தத் தண்ணீரை விரயமாக்காமல் சேர்த்து வைத்து வருஷம் பூராவும் வேண்டிய அளவு தண்ணீர் கிடைப்பதற்காகத்தான் சாரதா சாகரம் கட்டியிருக்கிறார்கள்.

சாரதா சாகரம் கட்டுவதற்கு ஏராளமான 'புல்டோஸர்கள்' வேலை செய்தன. சர்க்கார் அதிகாரிகளுக்கு உட்பட்ட கண்டிராக்டர்கள் மூலம் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் உழைத்தார்கள். இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் உழைத்தார்கள். இன்னும் ஏராளமான அகதிகளுக்கு வேலை கொடுத்து உதவியது. அவர்கள் பிழைப்புக்கு வழி செய்து அகதிப் பிரச்னையைச் சமாளித்தது. இது எல்லாவற்றையும் விடச் சுமார் இரண்டாயிரம் கைதிகள் எந்தவிதமான பாதுகாப்பும் இல்லாமல் ஆறு மாதம் வேலை செய்த விந்தையைக் குறிப்பிட வேண்டும். 'சம்பூர்ணனந்த முகாம்' என்ற இடத்தில் கைதிகள் தங்கி வேலை செய்த காட்சி அருமையான காட்சி.

அந்தக் காலத்தில் பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுதும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். சிலர் வெட்டுகிறார்கள்; சிலர் தோண்டுகிறார்கள். சிலர் வெட்டியதையும், தோண்டியதையும் கூடைகளில் சுமந்து கொண்டு போய் அணையில் கொட்டுகிறார்கள். சற்றுத் தூரத்தில் நின்று பார்த்தால் எறும்புப் புற்றில் சுறுசுறுப்புள்ள எறும்புகள் அங்கும் இங்கும் ஓடித் திரிந்து வேலை செய்வது போலத் தோன்றும். கிட்ட நெருங்கிச் சென்று பார்த்தாலோ தொழிலாளர்கள் மலர்ந்த முகத்துடன் வேலை செய்கிறார்கள் என்பதைக் காணலாம். மக்களுக்கு உடல் வருந்தி உழைப்பதைவிட மகிழ்ச்சியளிக்கக் கூடிய காரியம் வேறு ஒன்றுமே இல்லையோ என்று எண்ணும்படி மிகுந்த உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள்.

இதர தொழிலாளிகளைவிடக் கைதிகள் மிகத் திறமையாகவும் கவனமாகவும் வேலை செய்தனர். வேலை முடிந்து கைதிகள் வெளியேறும்



சமீபத்தில் பேபி சாந்தா சுக்கவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சென்னை நாரதப் பிரகாச ஹோட்டல் திறந்தவெளி அரங்கில் நடைபெற்றது. இந்த விழாவுக்கு நிதி அமைச்சர் திரு சுப்பிரமணியம் தலைமை தாங்கிச் சிறப்பித்ததுடன் குழந்தையின் திறமையையும் பாராட்டினார்.

போது அவர்கள் குணமே மாறி விட்டது. சமூகத்தில் மிக உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கும் கண்யமுள்ள கனவான்களாக அவர்கள் மாறி விட்டார்கள். உழைப்பு மனிதனின் மனத்தைக்கூட அல்லவா மாற்றி விடுகிறது!

இந்த அதிசயமான விவரங்களை இன்ஜினீயர் மிகுந்த பெருமையுடன் சொன்னார். இதைக் கேட்டவுடன் சாரதா சாகரத்தை நேரில் போய்ப் பார்த்தது போலவே ஆகிவிட்டது. ஆகவே எங்களுக்கு அங்கு போக வேண்டிய அவசியம் ஏற்பட வில்லை. அத்துடன் நேரமும் ஆகிவிட்டது. திரும்பி எழுபது மைல் 'உத்தரப் பிரதேச ரோட்வேஸ்' பஸ்ஸில் போக வேண்டாமா! ஆகவே இன்ஜினீயரிடம் இருந்து பிரியாவிடை பெற்றுக் கொண்டோம்.

"ஐயா! நீங்கள் எல்லாரும் மறுபடியும் ஒரு முறை அவசியம் வந்து போக வேண்டும். மனிதனின் முயற்சியால் கட்டப்பட்ட இந்தக் காதிமா மின்சார நிலயத்துக்கு எதிரில் ஒரு சின்னம் அமைக்கப் போகிறோம். முதலை வாயில் அகப்பட்ட கஜேந்திரனுக்கு மோட்சம் அளித்த காட்சியைச் சிற்ப வடிவமாகச் செய்து வைக்கப் போகிறோம். அதற்குள் வசதியான ரோடும், தங்குவதற்கு வேண்டிய நல்ல பங்களாக்களும் கட்டி விடுவோம்" என்றார்.

இவ்வளவு நல்ல மனிதரைக் காலையிலிருந்து கஷ்டப்படுத்தி விட்டோமே என்று நாங்கள் மனம் வருந்திக் கொண்டிருந்த போது மீண்டும் வரச் சொன்ன அவர் பெருந்தன்மையை மறக்கவே முடியவில்லை. அதை நினைத்து நினைத்து வியந்து கொண்டே பஸ் பிரயாணத்தைத் தொடங்கினோம்.

பஸ்ஸின் இடிபாடுகளைக்கூட அநுபவிக்க முடியாதபடி எல்லாரும் களைத்துப் போய் விட்டோம். சிலர் தூங்கிக் கூடப் போய்விட்டனர். இரவு எட்டு மணிக்கு பரேலி நகருக்கு வந்து சேர்ந்தோம். பரேலிக்கு வந்தவுடன் பஸ் கண்டக்டரைப் பார்த்து, "ஒரு நாள் பிரயாணத்திலேயே நாங்கள் இப்படி உடைந்து ஒன்றுக்கும் உதவாமல் போய் விட்டோமே, நீங்கள் எப்படி இதில் வருஷக்கணக்காக வேலை செய்கிறீர்கள்!" என்று கேட்டேன்.

"நீங்கள் மதராஸிலிருந்து வருகிறீர்கள் போலிருக்கிறது!" என்றார் கண்டக்டர்.

"ஆமாம்" என்றேன்.

"எல்லா பஸ்ஸையும் மதராஸ் பஸ் பாடி கட்டும் கம்பெனியாரே கட்டுகிறார்களா! எங்கோ அநுபவம் இல்லாத சிலரும் 'பஸ் பாடி' கட்டி அனுப்பி வைத்து விடுகிறார்கள். அதற்கு என்ன செய்வது!" என்றார் கண்டக்டர்.

நம் ஊர்ப் பெருமையை பரேலியில் வைத்துக் கேட்டபோது பெருமையாகவே இருந்தது. தமிழ் மக்கள் எல்லாருமே இதைக் கேட்டுப் பெருமை யடையலாம் அல்லவா!

இதுபோன்ற அணைகளையும் நல்லமாதிரி பஸ்களையும் இன்னும் பல முன்னேற்ற சாதனங்களையும் கட்டுவதற்கு நம் நாட்டுக்கு எத்தனையோ இன்ஜினீயர்கள் வேண்டும். அதற்கு இன்ஜினீயர்களைத் தயாரித்து அனுப்பும் திறமையான இன்ஜினீயரிங் கல்லூரிகள் வேண்டும். மிகத் திறமையான இன்ஜினீயரிங் கல்லூரி ஒன்று 'ரூர்கி'யில் இருக்கிறது. அங்கு பலவிதமான ஆராய்ச்சிக் கழகங்கள் வேறு இருக்கின்றன. அவைகளை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காக ரூர்கிக்குச் செல்வோம், வாருங்கள். (தொடரும்)

பம்பாய் ஓரியண்டல் லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் உதவி ஏஜன்ஸி மானேஜர் ஸ்ரீ என். சுவாமிநாதன் அவர்களின் குமாரன் ஸ்ரீ எஸ். நடராஜன், பி.எஸ்ஸி., பி. இ. க்கும், மத்திய சர்க்கார் நிதி இலாக்கா துணைக் காரியதரிசி ஸ்ரீ எஸ். ஜெயசங்கர் எம். ஏ. அவர்களின் புதல்வி சௌ. ஹேமா எம். ஏ.க்கும் சமீபத்தில் திருச்சியில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்குத் தமிழகத்தின் பிரமுகர்கள் பலர் விஜயம் செய்து சிறப்பித்தனர். இதை ஒட்டிப் புது டில்லியில் ஸ்ரீ ஜயசங்கர் நடத்திய வரவேற்புக்கு உதவி ஜனாதிபதி, மந்திரிகள் மற்றும் பல பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!



# பிரஷால் தேய்ப்பதால்
# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட்
# ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்.....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது....அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனுமலை அரிக்கும் தீய அமிலங்களையும் ... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது

**புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்**



Godrej ரிஜிஸ்டர்டு

# கோத்ரெஜ்

# டம்ளர்

## பாட்லாக்

**ஆணியால் இறுக்கப்படாத தயாரிப்பு**

கலவை உலோகங்களால் தயாரிக்கப் பட்டது. அதன் எஃகினுலான பூட்டு வளையத்திற்கு துருவை எதிர்ப்பதற்காக "காட்மியம் - பிளேடிங்" கொடுக்கப்பட்டிருக்கிறது.

ரூ. 3-4 மாத்திரம் (வரிகள் தனி)

கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி லிட்.
ஸ்தாபிதம்: 1897

பாதுகாப்புச் சாதனங்கள், வீடு, ஆபீஸ், ஆஸ்பத்திரிக்கான எஃகு பர்னிச்சர், எஃகு ஜன்னல்கள்

---

லக்ஷ்மியின் ஆடைகள் எப்பொழுதுமே **வெள்ளையாக** இருந்தது





என் எஜமானியின் மகள் லக்ஷ்மி அவள் உபாத்தியாயினியின் பிரியத்திற்கு பாத்திரமானவள். அவள் தோழிகளும் அவளுடைய ஆடைகள் எப்பொழுதும் வெள்ளையாக இருக்க காரணம் என்னவென்று ஒரு நாள் அவளைக் கேட்டபொழுது, அவளிடம் பொறாமை கொள்வது நிஜம்.

லக்ஷ்மியின் தாயார் அவளுடைய ஆடைகளை வெளுக்க டிரேபால் உபயோகிக்கிறார் என்று சொன்னாள். எந்த சோப்பும் அளிக்க முடியாத அபூர்வமான வெண்மையை வெள்ளைத் துணிகளுக்கு (பருத்தித் துணி, ஆர்ட் ஸில்க்குகள்) அளித்து அவைகளை பிரகாசிக்க வைக்கும் தன்மையுடையது டிரேபால்.





1 அவுன்ஸ், 4 அவுன்ஸ் கொண்ட அழகான பிளாஸ்டிக் டப்பிகளில் டிரேபால் கிடைக்கிறது. டப்பிகள் காலியானவுடன் அவைகளை தூக்கி எறிந்து விடாதீர்கள். அவைகள் பல காரியங்களுக்கும் உதவும்.

# டிரேபால்

Geigy

அமால்கமேட்டட் கெமிகல்ஸ் & டைஸ்டப்ஸ் கோ. லிட்.
தபால் பெட்டி 965, பம்பாய்.

SISTA'S-AML 8 TAM

# விதியின் விசித்திரம்

எஸ். பி. மல்ஹோத்ரா

உருதுக் கதை : மொழிபெயர்ப்பு : ஜெயமணி

அப்போது காஷ்மீர் கொந்தளிப்பு முற்றிலும் அடங்கி விடவில்லை. எனினும் நான் ஸ்ரீநகருக்குத் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. ஸ்ரீநகர்மீது படையெடுத்து வந்த பைசாசக் கூட்டங்களுக்குப் பயந்து, நாங்கள் ஸ்ரீநகரை விட்டு வெளியேறிச் சென்றிருந்தோம். ஆனால், அந்த நகருக்கு ஏற்பட்ட ஆபத்து தவிர்க்கப்பட்டு விட்டதால், நாங்கள் உடனே அங்கு திரும்பிச் செல்ல விரும்பினோம்.

ஸ்ரீநகருக்கு ஆபத்து ஏற்பட்ட போது, எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பிரிந்து மூலைக்கு ஒருவராக ஓடிவிட்டார்கள். நாளடைவில் மிகவும் சிரமப்பட்டு ஒவ்வொருவரும் பரஸ்பரம் இருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டோம்.

கடைசியாக, ஒருநாள் குறிப்பிட்ட நேரத்தில் நாங்கள் எல்லோரும் ஜம்முவில் சேர்ந்து கொள்வது என்றும், அங்கிருந்து ஸ்ரீநகருக்குப் புறப்பட்டுச் செல்லுவது என்றும் திட்டம் போட்டிருந்தோம்.

ஆனால், துரதிர்ஷ்டவசமாக நான் ஒருநாள் தாமதித்தே ஜம்மு போய்ச் சேர நேர்ந்தது. மற்றவர்கள் எனக்காகக் காத்திராமல், தாங்கள் முதலில் போட்ட திட்டப்படி ஜம்முவிலிருந்து புறப்பட்டுச் சென்று விட்டார்கள்.

எனினும், அவர்கள் எனக்காக ஒரு மோட்டாருக்கு ஏற்பாடு செய்து விட்டுத்தான் சென்றிருந்தார்கள். இல்லாவிடில், அச் சமயத்தில் ஸ்ரீநகருக்குச் செல்ல எனக்கு வாடகை மோட்டார் எளிதில் கிடைத்திராது.

சாதாரண காலத்திலேயே ஜம்மு—ஸ்ரீநகர் சாலையில் அதிகப் போக்குவரத்து இராது. அதிலும் மலைவாசிகளின் படையெடுப்புக்குப் பிறகு, அந்தச் சாலையில் இராணுவ லாரிகளைத் தவிர வேறு எவ்விதப் போக்குவரத்தும் அரிதாகியது.

காலை பத்து மணிக்கு நான் எனது நீண்ட தூரப் பிரயாணத்தை ஆரம்பித்தேன். ஜனக் கூட்டம் நிறைந்த ஜம்முதெருக்களைக் கடந்து நகருக்கு வெளியேசென்றபோது மோட்டாரை நிறுத்தும்படி யாரோ ஒருவர் சைகை காட்டினார். அருகில் சென்றபோது அவர் ஓர் இராணுவ அதிகாரி என்பது தெரிய வந்தது.

"நீங்கள் ஸ்ரீநகருக்கா செல்லுகிறீர்கள்!" என்று அந்த அதிகாரி டிரைவரைப் பார்த்துக் கேட்டார்.

"ஆமாம்" என்று பதிலளித்தார் டிரைவர்.

"என்னையும் ஏற்றிச் செல்ல உங்களுக்குச் சௌகரியப்படுமா! நான் மிகவும் அவசரமாக ஸ்ரீநகருக்குச் செல்ல வேண்டும். நான் எவ்வளவோ முயற்சி செய்தும் எனக்கு மோட்டார் எதுவும் கிடைக்கவில்லை. பிரயாணத்துக்குரிய கட்டணத்தைச் செலுத்திவிடத் தயாராக இருக்கிறேன்" என்றார்.

அவருக்கு, டிரைவர் என்னைப் பார்த்த வண்ணம் பதில் அளித்தார்.

"இந்தப் பெண்மணிதான் இந்த மோட்டாரை வாடகைக்கு அமர்த்திக் கொண்டிருக்கிறார். அவருக்கு ஆட்சேபனை இல்லையெனில், நான் ஏற்றிச் செல்லத் தயாராக இருக்கிறேன்" என்றார் டிரைவர்.

முன்பின் தெரியாத யாரோ ஒருவர் என்னுடன் மோட்டாரில் வருவதற்கு நான் எவ்விதம் இசைந்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. என்ன பைத்தியக்காரத்தனம்! அவருக்காக நான் கதவையும் திறந்தேன்.

"தங்கள் உதவிக்கு வந்தனம்" என்று சொல்லிய வண்ணம் அவர் வண்டியில் ஏறினார்.

"இது என்ன பிரமாத உதவியா!" என்று அலட்சிய பாவனையுடன் சொல்லிவைத்தேன்.

• • •

மோட்டார் மறுபடியும் வேகமாகப் புறப்பட்டுச் சென்றது.

நான் பின் பக்கத்தில் ஒரு மூலையில் உடலை ஒடுக்கிக் கொண்டு உட்கார்ந்து கொண்டேன். பொழுது போக்குக்காக நான் கொண்டு வந்த பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினேன். ஆனால் என் மனம் அதில் லயிக்கவில்லை.

படிப்பது போல் பாசாங்கு செய்து கொண்டிருந்த நான் அப்போதைக் கப்போது ஜன்னல் வழியாக அதிவேகமாகத் தோன்றி மறையும் காட்சிகளைப் பார்ப்பதும், என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அதிகாரியை அவருக்குத் தெரியாமல் கடைக் கண்ணால் பார்ப்பது



மாக இருந்தேன். என்னைப் போலவே அவரும் செய்து கொண்டிருந்தார் போலும்!

ஒரு சமயம் அவர் என்னைப் பார்ப்பதும் நான் அவரைப் பார்ப்பதும் ஏககாலத்தில் நிகழ்ந்ததால், இருவர் கண்களும் சந்தித்தன.

அப்போது என் நிலைமை சங்கடமாகியது. ஆனால், அவர் நிலைமையைச் சமாளித்துக் கொண்டு, என்னுடன் பேச்சை ஆரம்பிப்பதற்கு அச்சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொண்டார்.

"நான்தான் காப்டன் ராய்" என்று பேச்சை ஆரம்பித்தார்.

மரியாதைக்காக நானும் ஏதாவது பேச வேண்டாமா!

"உங்களைச் சந்திக்கச் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக மிகவும் சந்தோஷம், காப்டன் ராய்... என் பெயர் விமலா" என்றேன்.

அதே சமயத்தில் மோட்டார் திடீரென்று ஓரிடத்தில் திரும்பவே, அந்த வேகத்தில் காப்டன் ராய் என் மீது விழுந்து விட்டார். அவர் மீண்டும் தம்மைச் சரிப்படுத்திக்கொண்டு உட்காருவதற்குள், மோட்டார் மற்றொரு புறம் வேகமாகத் திரும்பவே நான் அவர் மீது மோதிக் கொண்டேன்.

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். இது மோசமான ரஸ்தாவாக இருப்பதால் அப்படி நேர்ந்து விட்டது" என்றார் காப்டன் ராய்.

நான் என்ன பதில் சொல்லுவது! பேசாமல் மோட்டாரின் ஒருபுறத்துக் கதவைக் கெட்டியாகப் பிடித்த வண்ணம், ஓரத்தில் ஒண்டிக் கொண்டேன்.

பாம்பு போல் வளைந்து வளைந்தும், மேடு பள்ளங்களில் மோட்டார் ஏறி இறங்கியும் சென்று கொண்டிருந்தது. ரஸ்தாவின் இருபுறங்களிலும் காணப்பட்ட இணையற்ற இயற்கைக் காட்சிகளை நான் ரசித்துக் கொண்டு செல்லுகையில், காப்டன் ராய் திடீரென்று பேசத் தொடங்கியது என் சிந்தனையைக் கலைத்தது.

"அந்தப் பத்திரிகையை நான் பார்க்கலாமா!" என்றார் ராய்.

'இது என்ன தொல்லையாகப் போய் விட்டதே! இந்த மனிதனை மோட்டாரில் ஏறிக் கொள்ள அநுமதித்ததே தவறு' என்று என் மனம் அடித்துக் கொண்டது.

நான் பதில் பேசாமல் பத்திரிகையை அவர் இருக்கும் பக்கமாக வீசி எறிந்தேன். அது அவர் உட்கார்ந்திருந்த இடத்துக்குக் கீழே போய் விழுந்தது.

அவ்விதம் நான் அலட்சியமாக எறிந்தது, நான் அவரை அவமதித்ததாக அவருக்குத் தோன்றி விட்டது. எனவே, அவர் வேண்டா வெறுப்பாக அந்தப் பத்திரிகையை எடுத்து உட்காரும் இடத்தில் வைத்து விட்டு, மோட்டாரை நிறுத்தும்படி டிரைவரிடம் சொன்னார்.

அதற்கிணங்க, உடனே டிரைவரும் மோட்டாரை நிறுத்தி விட்டார்.

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். நான் இங்கே இறங்கி விடுகிறேன். உங்களுக்குச் சிரமத்தைக் கொடுத்ததற்காக மிகவும் வருந்துகிறேன். இனிமேல் இந்த மோட்டாரில் பிரயாணத்தைத் தொடருவது என்னால் முடியாத காரியம்" என்றார் காப்டன் ராய்.



எனக்கு ஒன்றுமே புரியவில்லை. "நீங்கள் ஏன் திடீரென்று மனத்தை மாற்றிக் கொண்டு விட்டீர்கள்!" என்று கேட்டேன்.

"நான் இங்கேயே இறங்கி விடுகிறேன்."

"நீங்கள் மிகவும் அவசர காரியமாக ஸ்ரீநகருக்குச் செல்ல வேண்டும் என்று சொன்னீர்களே! ஸ்ரீநகர் இன்னும் பல மைல்கள் தூரம் இருக்கிறதே!"

"நான் அவ்விதம் கூறியது உண்மைதான். ஆனால், இதற்கு மேல் இந்த மோட்டாரில் பிரயாணம் செய்ய நான் விரும்பவில்லை."

"ஏன்! அதற்குக் காரணம் என்ன!"

"ஏனெனில், நாம் இன்னும் வெகுதூரம் பிரயாணம் செய்ய வேண்டும். ஆனால், நீங்களோ மிகவும் குறுகிய நோக்கம் கொண்டவராக இருக்கிறீர்கள். இன்று இந்த மோட்டார் இவ் வழியாக வரும் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. ஏதோ தற்செயலாக நாம் சந்தித்தோம். நான் மேற்கொண்டு தங்களுக்குப் பாரமாக இருக்க



# பின்னித்துணிகள்

## —உங்கள் சக்திக்குட்பட்ட சுகவாழ்க்கைப் பொருள்

ஒரு சிலரே வாங்கக்கூடிய சுகவாழ்க்கைப்பொருள்கள் சிலவுண்டு. இன்னும் சில, வெகு சிலரால்தான் வாங்காமல் அலட்சியம் செய்யமுடியும்—அழகு, சௌகரியம் அளிப்பது தவிர நீண்ட காலம் உழைக்கக்கூடியதாயுமுள்ள பொருள்களே இக்கூறியவை.

மூன்று தலைமுறைகளுக்கு மேலாக பின்னிஜவுளி இந்தியா முழுவதிலும் சிறந்த மதிப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கி வந்திருக்கிறது. இன்று மேன்மேலும் அதிக ஜனங்கள் பின்னித் துணிகளைக்கேட்டு வாங்குகின்றனர். காரணம் இந்த உயர்தர பொருள்தங்கள் சக்திக்குட்பட்டு வாங்கக் கூடியதே, என்ற நம்பிக்கை அவர்களுக்குண்டு.

பக்கிங்ஹாம் & கர்நாடிக் கம்பெனி லிட்.,

பெங்களூர் வுல்லன், காட்டன் &
ஸில்க் மில்ஸ் கம்பெனி. லிட்.

மானேஜிங் ஏஜண்டுகள் :
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட்., மதராஸ்



By.896

விரும்ப வில்லை. இவ்வளவு தூரம் என்னை ஏற்றி வந்ததற்காக உங்களுக்கு வந்தனம். தங்களிடம் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்."

இவ்விதம் காப்டன் ராய் கூறியதும், என் தவறை நான் உணர்ந்தேன். நான் அப்படிப் பத்திரிகையை அலட்சியமாக வீசி எறிந்திருக்கக் கூடாதுதான்.

"நான் மிகவும் வருந்துகிறேன். தயவு செய்து மன்னித்துக்கொள்ளுங்கள்" என்றேன்.

மேற்கொண்டு தொடர்ந்து, "எனக்கும் வழித் துணை வேண்டும் அல்லவா! ஆகையால் நீங்கள் இந்த இடத்திலேயே உங்கள் கோபத்தை மாத்திரம் இறக்கி விட்டு விட்டு வாருங்கள்" என்றேன் சிரித்துக் கொண்டே.

காப்டன் ராயின் கோபம் தணிந்தது.

*　　*　　*

மறுபடியும் நாங்கள் புறப்பட்டோம். சாலை வளைந்து வளைந்தும் மிகவும் கரடு முரடாகவும் இருந்ததால், அடிக்கடி நாங்கள் இருவரும் மோதிக் கொள்ளும்படி நேர்ந்தது.

அத்தகைய நிலைமையில் எனது பிரயாணம் எவ்விதம் திருப்திகரமாக இருக்க முடியும்! எனினும், என்னுடன் பிரயாணம் செய்யும்படி அவரை நானே வற்புறுத்திய பிறகு, என் அதிருப்தியைக் காட்டுவது உசிதமாகுமா! எனவே, அதைச் சகித்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

சிறிது நேரம் கழித்து, பத்திரிகையைப் படிப்பதற்குக் கொடுக்கும்படி அவர் மீண்டும் என்னைக் கேட்டார். நான் மிகவும் மரியாதையுடன் பத்திரிகையை அவரிடம் கொடுத்தேன்.

அவர் புன்முறுவலுடன் எனக்கு வந்தனம் அளித்து விட்டு, நிதானமாகப் பத்திரிகையை வாசிக்க ஆரம்பித்தார்.

பத்திரிகையை வாசித்துக் கொண்டிருந்தவர் திடீரென்று என் பக்கம் திரும்பி, "உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா!" என்றார்.

மீண்டும் இது என்ன தொல்லை! "சரி, கேளுங்கள்" என்றேன் மெதுவாக.

அவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்.

"என்ன கேள்வி!" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை" என்று மழுப்பினார்.

"கேள்வி கேட்க விரும்புவதாகக் கூறிவிட்டு ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்!" என்றேன்.

"உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா!"

'இந்த காப்டன் ராய் விசித்திர சுபாவமாக அல்லவா இருக்கிறார். இரண்டு மணி நேரத்துக்கு முன்பு வரையில் அவரை யார் என்றே எனக்குத் தெரியாது. அப்படியிருந்தும் எப்படிப்பட்ட கேள்வி கேட்கிறார்!' என்று மனத்தில் எண்ணிக் கொண்டேன்.

அவரது கேள்விகளுக்குப் பதில் எதுவும் சொல்லாமல் நான் பேசாமல் இருந்தேன்.

எனது மௌனத்தைக் கண்டதும், "வருந்துகிறேன். என் மடத்தனத்துக்காக உண்மையில் வருந்துகிறேன்" என்றார் காப்டன் ராய்.

"நீங்கள் கேட்டதில் தவறில்லை" என்றேன்.

"உங்கள் மௌனமானது உங்களுக்குக் கல்யாணம்......"

காப்டன் ராய் தாம் கூற வந்ததை முடிப்பதற்குள், "நான் இன்னும் கல்யாண பந்தத்தில் சிக்கிக் கொள்ளவில்லை" என்றேன்.



ஆலப்புழை அட்வகேட் ஸ்ரீ கே. பார்த்தசாரதியின் குமாரி சௌ. சாந்தாவுக்கும், கும்பகோணம் அட்வகேட் ஸ்ரீ கே. ராகவாச்சாரியாரின் குமாரர் செங்கல்லை போலீஸ் உதவி சூப்பரின்டென்டென்ட் ஸ்ரீ கே. ஆர். ராஜகோபாலன் ஐ. பி. எஸ்.ஸுக்கும் திருச்சானூரில் சமீபத்தில் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

---

காப்டன் ராய் கேட்ட கேள்விக்குப் பிறகு நான் ஏன் பேசாமல் இருக்க வேண்டும்!

"உங்கள் சேதி என்ன!" என்றேன்.

அவருக்குக் கல்யாணம் ஆகியிருந்தாலென்ன, ஆகாவிட்டாலென்ன! அதில் எனக்கு என்ன அக்கறை! இருந்தாலும் கேட்டு வைத்தேன்.

"எனக்கா! எனக்குச் சொந்தம் என்று சொல்லக் கூடியவர் இந்த உலகில் யாருமே இல்லை. நான் இவ்வுலகில் தனித்து நிற்கும் ஒரு துரதிர்ஷ்டசாலி. ஆம், இந்தப் பரந்த உலகில் நான் ஓர் அநாதைதான்" என்றார்.

"ஏன் அப்படி சொல்லுகிறீர்கள்!"

காப்டன் ராய் ஆழ்ந்த பெருமூச்சுடன் சொல்லத் தொடங்கினார்:

"குடும்ப வாழ்க்கையில் வெறுப்படைந்த என்னை, விதி இராணுவத்தில் கொண்டு வந்து சேர்த்தது. என் குடும்பத்துக்கு என்னால் எவ்விதப் பலனும் இல்லை என்பதை உணர்ந்த நான், என்னால் தாய்நாட்டுக்காவது அற்ப பலன் ஏற்பட வேண்டும் என்று நினைத்தேன். அதற்காகவே நான் இராணுவத்தில் சேர்ந்தேன்."

"ஆனால், குடும்ப பாசத்தை அறவே கத்தரித்துக் கொண்டு வெளியேறுவது மிகவும் கஷ்டமாயிற்றே!" என்றேன்.

"என் சம்பந்தப்பட்ட வரையில் அதில் கஷ்டம் எதுவும் இல்லை. நான் குடும்பத்தை விட்டு வந்து பல வருஷங்கள் ஆகிவிட்டன. ஆனால், இதுவரையில் ஒரு நாள்கூட நான் என் குடும்பத்தைப் பற்றி நினைத்துக் கொண்டதில்லை. பழைய சிந்தனைகளுக்கு நான் இடம் கொடுப்பதே இல்லை. எனினும், அதிர்ஷ்டம் வாய்ந்த குடும்பங்களைக் கண்டு நான் பொறாமைப் படுவது உண்டு. அத்தகைய குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் பரஸ்பரம் உள்ள கஷ்டங்களை உணர்ந்து கொள்கிறார்கள்; ஒருவருக்கொருவர் கஷ்ட நஷ்டங்களைச் சொல்லி ஆறுதல் அடைகிறார்கள்; சுகதுக்கங்களைப் பகிர்ந்து கொள்கிறார்கள். ஆனால், என் குடும்பத்தின் இலட்சணம் முற்றிலும் வேறானது. எனவே, சலிப்படைந்து நான் வெளியேறி விட்டேன்.

ளரி போர்முனையிலிருந்து நான் நாளை உயிருடன் திரும்பி வராவிட்டாலும், பகைவரின் பீரங்கியால் என் உடல் சிதறு சிதறாகிவிட்டாலும், காப்டன் ராயின் கதி என்ன ஆயிற்று என்று கேட்க இந்த உலகில் யாருமே இல்லை. எனக்கு உற்றார் உறவினர் எவருமே இல்லை.''

காப்டன் ராயின் சோகம் ததும்பும் வார்த்தைகள் என் மனத்தை என்னவோ செய்தன.

சிறிது நேரம் மௌனமாக இருந்த ராய் மேலும் பேசலானார்:

"மரணம், தன்னைக் கண்டு பயந்து யார் ஓடுகிறார்களோ, அவர்களைப் பிடித்துக் கொள்கிறது. ஆனால், அதை யார் ஆர்வத்துடன் வரவேற்கிறார்களோ, அவர்களைத் தொடுவதே இல்லை! நான் இன்று ஏன் உயிருடன் இருக்கிறேன், தெரியுமா! மரணம் என்னைத் தொட மறுக்கிறது. நான் கோழையானதால், என்னுடைய உயிரை நானே போக்கிக் கொள்ளவும் துணியவில்லை.''

காப்டன் ராயின் வார்த்தைகளைக் கேட்டு நான் உணர்வற்றுப் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தேன். அவரது வார்த்தைகளில் தான் எவ்வளவு சோகம்! அவரைப் போல் உறவினரே யில்லாத துரதிர்ஷ்டசாலி இந்த உலகில் இருக்க முடியுமா என்று எண்ணினேன். வாழ்க்கைப் பாதையில் செல்லுவோரில் இப்படியும் ஒருவர் இருக்கிறாரே என்று ஆச்சரியமடைந்தேன். எல்லையே இல்லாத அவரது சோகத்தைக் கண்டு நான் திடுக்கிட்டேன். என் கண்களில் நீர் ததும்பியது. இருந்தாலும் அதை அவரிடம் வெளிக் காட்டிக் கொள்ள நான் விரும்பவில்லை.

அச்சமயத்தில் டிரைவர், "இந்த இடம்தான் சாப்பிடும் இடம். நீங்கள் இங்கே இறங்கிச் சாப்பிட்டுவிட்டு வருகிறீர்களா!'' என்றார்.

"ஆமாம், இதுதான் பிரயாணிகள் தங்கும் இடம். நாம் இங்கு இறங்கிச் சாப்பிட்டு விட்டுப் புறப்படுவோம்'' என்றேன்.

சாப்பிட்டு விட்டுச் சிறிது நேரம் இளைப்பாறுவதற்காக எல்லோரும் அந்த இடத்தில் இறங்கினோம்.

(அடுத்த இதழில் முடியும்)

# வட்ட மேஜை

## இந்தியாவின் பெருமை

வட இந்திய யாத்திரை என்ற தலைப்பைக் கண்டேன். சென்ற வார இதழில் சாதாரணமாக எல்லாவற்றையும் படிப்பது போல்தான் படித்தேன். படித்து முடிந்ததும் எல்லாம் கனவு போலத் தோன்றியது. அப்படி யென்றால் இதுவரையில் எங்கிருந்தேன் என்று எனக்கே தெரியவில்லை. நானே நேரில் சென்று எல்லாவற்றையும் பார்ப்பது போலவே பட்டது. அதை விட இந்த வார இதழில் அலுப்புத் தட்டாத 70 மைல் பஸ் பிரயாணம் சாரதா நதிக்கரை, காட்டில் கைலாசம் இவை யெல்லாம் படிக்கும்போது இந்தியாவின் பெருமையும், மக்களின் தன்னலமற்ற பணியும், கொடிய மலேரியாவையும் பொருட்படுத்தாது உழைத்த தியாக சிந்தையும் என் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்தன.

கல்யாணபுரம்
6—8—55 கே. ரங்கநாதன்

●

## வட இந்திய யாத்திரை

சென்ற 'கல்கி' இதழுக்கு முந்தின இதழ்களில் திரு பகீரதன் 'பூமியை வெட்டிக் குடைகிறார்கள், பெட்ரோலியம் எடுத்துக் குவிக்கிறார்கள்'' என்ற கட்டுரையை எழுதிச் சிறந்த மதிப்பைப் பெற்று விட்டார்கள்.

சென்ற இதழிலிருந்து "வட இந்திய யாத்திரை'' என்ற சிறந்த கட்டுரையைத் திரு பகீரதன் ஆரம்பித்திருப்பது மிகவும் போற்றுதற்குரிய விஷயமாகும். பிரயாணம் செய்தால் மட்டும் போதாது. அதை மக்களுக்கு விளங்கும்படி செய்ய வேண்டும் என்ற கொள்கையைத் திரு பகீரதன் கடைப்பிடித்து இருக்கிறார். அவருடைய இந்தக் கட்டுரையைப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் மனக்கண் முன்னே நிகழ்ச்சிகள் தோன்றும்படியாகத் திறமையாகத் தயாரித்திருக்கிறார்.

சென்னை
5-8-55 ஆர். ராமகிருஷ்ணன்

●

## டாக்டர் சுரேஷ்

ஆசிரியர் திரு சோமு அவர்கள் எழுதி வரும் 'ரவி சந்திரிகா' கதை மிக உன்னதமாக இருக்கின்றது. டாக்டர் சுரேஷ் அன்புடன் ரவியினிடத்தில் நடந்து கொள்ளும் முறை விவரிக்க முடியாத வாஞ்சை. அவரையும் அறியாமல் ரவியின் மீது ஏற்பட்டுள்ள பாசம். மிகவும் போற்றத் தக்க வகையில் நடைமுறை வாழ்க்கைச் சம்பவத்தினைப் படம் பிடித்துக் காட்டுவது போல் எழுதுகிறார். அன்பு என்றால் என்ன! அன்பின் பிணைப்பு எத்தகையது என்பதனைச் சித்திரித்து ஒவ்வொருவருடைய சிந்தனையைச் சீர் தூக்கி விடுகிறார். அன்பிலே தோய்ந்தவருக்குத்தான் புரியும் அதனுடைய விசேஷ சக்தி! ரவிக்கு டாக்டர் எழுதிய கடிதத்தில், "வாழ்க்கைப் பாதையிலே சுமை தாங்கிகள் இருந்தாலொழிய வாழ்க்கை சலிப்புத் தட்டும்'' என்றும், "மனத்திலே பொங்கி எழும் உணர்ச்சிகளை வெளிப்படுத்தினாலன்றி உடம்பு பாதிக்கப்படும்'' என்ற மனோ தத்துவத்தையும், "எந்தச் சமயத்திலும் உதவிக்கு ஒரு நண்பன் இருக்கிறான் என உரிமையோடு கருதுங்கள். அதை விட சந்தோஷம் வேறில்லை'' என்றும் ஆசிரியர் எடுத்துக் காட்டுவது மிகமிகச் சிறந்ததாக இருக்கின்றது. சம்பவங்களைத் தத்ரூபமாக விளக்குகிறார். இப்பேர்ப்பட்ட சிறந்த கதை மக்கள் வாழ்வுக்குப் பெரிதும் பயனுறும் என்பதில் ஐயமில்லை.

திருவண்ணாமலை
4—8—55 ஆர். எம். கண்ணன்

# 'வெயிற்காலத்து வயிற்றுக் கோளாறுகளை' தளதளக்கும் பானம் நிறுத்துகிறது



வெயில் காலத்தில் உங்கள் வயிறு மிகச் சுலபமாகக் கெட்டுவிடுகின்றது. உங்கள் வாயில் ஒரு வித துர்க்கந்தம் ஏற்படுகிறது. தவிர நீங்கள் தளர்ச்சியாயும், சோம்பலுடனும் இருக்கின்றீர்கள். ஈனோ உங்கள் வயிற்றை சீராக்கி உங்கள் தேகநிலையை நேர்செய்து அதை ஆரோக்கியமாயும், சுறுசுறுப்பாயுமாக்குகின்றது.

ஈனோ எளிமையானது எனினும் வயிற்றில் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், நெஞ்செரிச்சல், வாயுப்பொருமல் முதலிய உபாதைகளை துரிதமாயும், நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது. எட்டே செகண்டுகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்— வயிற்றுக்கு மட்டுமல்ல, வாய்க்குக்கூட!

மிதம் மீறி புசிப்பதாலோ அல்லது உண்பது உங்கள் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாமலிருப்பதாலோ ஈனோவின் விசேஷசக்தி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த உதவுகிறது. உங்களுக்கு லேசாய் பேதியாக விரும்பினால் காலி வயிற்றில் கொஞ்சம் பெரிய 'டோஸ்' உட்கொள்ளவும். எப்பொழுதும் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'டை கையிருப்பில் வைத்துக் கொள்ளவும்.

## அது உங்களுக்கு குணம் செய்வதுடன் குளுமையையும் புத்துணர்ச்சியையும் தருகிறது

# ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'




பெரிய புட்டி ரூ. 3/12
சிறிய புட்டி ரூ. 2/8
உள்ளூர் வரிகள்
பிரத்யேகம்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட ட்ரேட் மார்க்குகளாகும்

ENO. 1508 (Tam)

# நாடும் நேரமும்

## "எவ்வளவு காலம் சரியான நேரம் காட்டும்?"

நன்கு தேர்ச்சி பெற்ற ஒரு கடியார வியாபாரி இம்மாதிரியான கேள்விகளுக்குச் சாதுரியமான, நம்பகமான பதில்களை அளிக்க வல்லவர்.

ஸ்விஸ் ஜுவெல்டு-லீவர் கடியாரங்கள் நெடு நாட்களுக்குச், சரியான நேரத்தைக் காட்டும் என்பதை நன்கு விளக்கிச் சொல்லுவார் அவர். ஏனெனில் ஸ்விஸ் மக்களைப் போன்ற கைதேர்ந்த வேலைக்காரர்களால் செய்யப்பட்ட ஜுவெல்டு கடியாரங்கள் நிரந்தரமாகச் சரியான நேரத்தைக் காட்டுவது நிச்சயம்.

ஆனால் நீங்கள் சில வாரங்கள் ஒரு கை கடியாரத்தை உபயோகித்த பின்னர் அவர் உங்கள் கடியாரத்தைச் சரிபார்க்க உங்களை வரச் சொல்லக்கூடும். ஏனெனில் இரு தனிப்பட்ட நபர்கள் ஒரே மாதிரியான கடியாரத்தை உபயோகிப்பதில்லை. உங்கள் வாழ்க்கைக்குத் தகுந்தபடி, உங்கள் கடியாரத்தையும் சற்று சரிபார்க்க நேரிடலாம்.

ஒரு தேர்ச்சி பெற்ற கடியார வியாபாரி வெறும் விற்பனையாளர் மட்டுமல்ல என்பது ஞாபகமிருக்கட்டும். அவர் விற்கும் கடிகாரங்களுக்கு அவர் அளிக்கும் பாதுகாப்பு, நீங்கள் உபயோகிக்கும் காலம் முழுவதிற்கும் நீடித்திருக்கும்.

**ஸ்விஸ் ஜுவெல்டு-லீவர் கடிகாரம் தான் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்குச் சரியான பெறுமானம்**



**இது தான் ஜுவெல்டு-லீவர்**

இவ்விரண்டு 'லீவர்-சக்தியல்' களும் நாளொன்றுக்கு 4,32,000 தடவைகள் எஸ்கேப் - வீலின் பற்களைத் தட்டுகின்றன. இவற்றின் நுனிகளில் ஜுவல் பொருந்தியிருந்தால்தான் இச் சக்திகள் வருஷக் கணக்கில் தேய்மானத்தை எதிர்த்து நிற்கும். நிரந்தரமாக உழைக்க வேறு சில இடங்களிலும் ஜுவல்கள் தேவை. எனினும் இவ்விரண்டு ஜுவல்களும் அத்தியாவசியமானவை.



## ஸ்விட்ஸர்லாந்து கடிகாரத்தயாரிப்பாளர்கள்

FHI-18-TAM




## 31. கதிர்காமம்

நதிகளே நாட்டின் நல்லணிகள் என்று பாடினர் தமிழ்க் கவிஞர். 'சான்றோர் கவி'யெனச் சென்ற கோதாவரியாறு "புவியினுக்கு அணியாய்" விளங்கிற்றென்று போற்றினர் புலவர் பெருமானாகிய கம்பர். தமிழகத்தில் வழங்கும் ஆற்றுப் பெயர்களில் பொன்னும் முத்தும் மணியும் அமைந்திருத்தல் இதற்கு ஒரு சான்றாகும்.

கண்ணப்பர் பணி செய்த காளத்தி மலையிலே பொன்முகலி என்னும் பொன்னாறு பாய்கின்றது. முதுகுன்றம் என்னும் பழம் பெயருடைய விருத்தாசலத்தை வலம் செய்கின்றது முத்தாறு. அழகர் மலையாகிய திருமாலிருஞ் சோலையை அணி செய்கின்றது சிலம்பாறு. இலங்கையின் தென் பகுதியில் உள்ள கதிர்காமம் என்ற திருப்பதியிலே மாணிக்க கங்கை என்னும் மணியாறு ஓடுகின்றது. அவ் ஆற்றங் கரையிலே அறுமுகச் செவ்வேளாகிய முருகன் கோயில் கொண்டுள்ளான்.

கடல் சூழ்ந்த இலங்கையில் உள்ள முருகப்பதிகளுள் தலை சிறந்தது கதிர்காமமே. அப்பதியில் உறையும் பெருமானை,

"கதிர் காம வெற்பில் —உறைவோனே
கனக மேரு ஒத்த —புயவீரா!"
(வெற்பு—மலை)

என்று ஆதரித்து அழைத்தார் அருணகிரியார். குன்றுதோறும் நின்று அருள் புரியும் இறைவன் முருகன் என்பது தமிழ் நாட்டார் கொள்கை யாதலின் கதிர்காம மலையும் அவர்க்கு உரியதாயிற்று. மெய்யடியார் மனத்தில் விளையாடும் முருகன்—கோலமா மயில் மீது குலாவும் குமரன்—கதிர்காம மலையில் காட்சி தரும் கோலத்தை அருமையாகப் பாடுகின்றார் அருணகிரியார்.

"மருவும் அடி யார்கள்
மனதில் விளை யாடும்
மரகத மயூரப் —பெருமாள் காண்
மணி தரளம் வீசி
அணி யருவி சூழ
மருவு கதிர் காமப்-பெருமாள்காண்"

என்பது அவர் திருவாக்கு. மாணிக்க கங்கை மலையினின்றும் அருவியாக இழிந்து பரந்து பாயும் இடம் இப்போது செல்லக் (செல்வக்) கதிர்காமம் என்று வழங்கப் பெறுகின்றது. பழைய கதிர்காமம் என்றும், சுவாமி மலை என்றும் அதனைச் சொல்வதுண்டு.

மணியாற்றின் கரையில் அமர்ந்த முருகனும் மாணிக்க வடிவத்தில் விளங்குகின்றான் என்பர். அக் காட்சியை மனக் கண்ணால் கண்டு மகிழ்ந்த அருணகிரியார், "மயில் ஏறி விளையாடும் முருகனே! அயராத அன்பர்க்கு அருகனே! கதிர் காமம் மேவிய கடவுளே! இதமொழி பகரினும், மதமொழி பகரினும் இவ் ஏழைக்கு இரங்கி வரவேணும்" என்று வேண்டுகின்றார்.

"கனகமா ணிக்க
வடிவனே மிக்க
கதிர்கா மத்தில் —உறைவோனே
முருகனே பத்தர்
அருகனே முத்தி
முதல்வனே பச்சை —மயில்வீரா"

என்று அவ் அடியார் பாடுகின்றார்.

கதிர்காமத்தை நினைத்துக் களிக்கின்ற அடியார்கள் கருவினை அறுவர்; முருகருள் பெறுவர். காட்டு வழிச் சென்றாலும்

# ஹாஸ்யக் களஞ்சியம்

## இரு புறம்!























அவர்க்குக் கள்வர் பயமில்லை; இருளிலே நடந்தாலும் மிருக பயமில்லை. விலங்குகளும் வெம்மை அடங்கிச் செம்மையுற்று வாழும் அம் மலையில்,

"சிங்கமும் வெங் களிறும் உடன்
விளையாடும் ஒருபால்
சினப்புலியும் மடப்பிணையும்
திளைத்திடும் அங் கொருபால்
வெங்கரடி மரையினொடும்
விளையாடும் ஒருபால்
விடஅரவும் மட மயிலும்
விருந்தயரும் ஒருபால்"

(மரை—காட்டுப் பசு)

அரியும் கரியும் அளவளாவித் திரியும்; மானும் புலியும் மருவி விளையாடும்; கரடியும் மரையும் கலந்து களிக்கும்; மயிலும் பாம்பும் மகிழ்ந்து விருந்தருந்தும்.

இத்தகைய இனிய சூழ்நிலையில் அமர்ந்த முருகனைக் குறிஞ்சி நிலக்குடிகளாகிய வேடர் ஆதியில் வழிபட்டனர்.

"வனமுறை வேடன்
அருளிய பூசை
மகிழ் கதிர் காமம்-உடையோனே"

(வனம் உறை—காட்டில் வசித்த)

என்று அன்னார் வழிபாட்டை விரும்பி ஏற்றுக் கொண்ட முருகன் பெருமையைத் திருப்புகழ் பாடிற்று.

கதிர்காமக் கோயில் சிறிது; ஆயினும் அதன் கீர்த்தி பெரிது. முன்னொருகால் வடநாட்டு மன்னன் ஒருவன் கதிர்காம வேலனைக் கண்டு வணங்கினான்; மகப்பேறில்லாத குறையை அப் பெருமானிடம் முறையிட்டான். "அறுவர் பயந்த ஆறமர் செல்வா! மலைமகள் மகனே! நின் இருவருளை நாடி வந்தடைந்தேன்! உன்னையொழிய ஒருவரையும் அறிகிலேன்; கருத்தறிந்து முடிக்கும் கதிரேசா! நின் கருணையினால் எனக்கு மகப்பேறு கிடைக்குமாயின் அக் குழந்தையை உனக்கே அர்ப்பணம் செய்வேன்" என்று வாக்களித்தான். நம்பிக்கையோடு தன் நாட்டுக்குத் திரும்பினான்.

கதிரேசன் அருளால் ஒரு பெண் மகவைப் பெற்றான் அம் மன்னன். அதனைப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தான்; மழலைச் சொற் கேட்டு மகிழ்ந்தான். அவன் மனக்குறை தீர்ந்தது. நலமெலாம் ஒருங்கே பெற்ற அந் நங்கையைச் சில தோழியரோடு கதிர்காமத்துக்கு அனுப்பினான்.




சாமா










தந்தையின் ஆணைப்படி கந்தன் கோயிலில் திருப்பணி செய்து வந்தாள் அம் மங்கை.

"எங்கை உனக் கல்லாது
எப்பணியும் செய்யற்க
கங்குல் பகல் எங்கண்
மற்றொன்றும் காணற்க"

(கங்குல் - இரவு)

என்று தோழியரோடு நாள்தோறும் கதிரேசனைத் தொழுதாள். கோயிலின் அருகே அமைந்த ஒரு திரு மடத்தில் இருந்து கொண்டு பணி செய்தனர் அப் பாவையர்.

இவ்வாறிருக்கையில், ஒருநாள் கண்டி யரசனாகிய விக்கிரம ராஜ சிங்கன் கதிர் காம வேலனை வழிபட வந்தான்; பூமாலை புனைந்து கொண்டிருந்த பூவையைக் கண்டான்; காதல் கொண்டான். "கற் பகத்தின் பூங்கொம்போ! காமன்தன் பெருவாழ்வோ!" என்று அவன் அற்புத மேனியின் அழகை நினைந்து நினைந்து நெடு மூச்செறிந்தான். கதிர்காம நாதனைக் கைதொழுத பலன் இன்றே கிடைத்தது என்று எண்ணித் தன் கருத்தைத் தோழன் ஒருவனிடம் சொல்லி அனுப்பினான்.

"ஆடவர் தனதிடத் தருகு போகினும்
நாடிமற் றவர்பெயர் நயந்து கேட்பினும்
விடுவள் உயிரென வெருவுறும் மற்றவள்
சேடியர் வழிபடச் செல்லும் செல்வியே"

என்ற பாட்டுக்கு ஒரு எடுத்துக் காட்டாக நின்ற பாவை அம்மொழி கேட்டுச் சீறினாள். மாதவர் கோன்மையும் மட வார் கற்பையும் காக்கும் கடமை பூண்ட காவலனோ இவ்வாறு கருதினான் என்று எள்ளி நகைத்தாள்.

மங்கை மறுத்தாள் என்று அறிந்த மன்னன் மானத்தால் மனம் புழுங்கினான்; அவளைப் பற்றிக் கொணருமாறு படைத் தலைவரை ஏவினான். மறப்படை சென்று மங்கை தங்கியிருந்த மடத்தை வளைத் தது; ஆர்ப்பரித்தது. 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்று திடமாக நம்பிய நங்கை கதிரை வேலனைக் கை கூப்பித் தொழுதாள்.

"காக்கக் கடவியநீ
காவா(து) இருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம்
அறுமுகவா - பூக்கும்
கடம்பா, முருகா
கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய்இனி"

என்று பரிந்து அழைத்தான். அப்பொழுது ஊரார் கூடினர்; மன்னன் படையை விரட்டி அடித்தனர். கண்டியான் செய்கையைக் கண்டித்தனர். மானம் இழந்த காவலன் ஓடி மறைந்தான். மறுவிலாக் கற்புடைய அம்மாது பல்லாண்டு பணி செய்து எண்பதாண்டுகளுக்கு முன் கதிரேசன் திருவருளிற் கலந்தாள்.

தமிழ் மக்களின் பரந்த மனப்பான்மைக்கு ஒரு சிறந்த சான்றாகத் திகழ்வது கதிர்காமம். தொன்று தொட்டுத் தமிழருக்குக் கண்கண்ட தெய்வமாக விளங்குபவன் முருகன். முத்தமிழால் வைதாரையும் வாழ்விப்பவன் முருகன். இத்தகைய இறைவனைக் கதிர்காமத்தில் பூசை செய்பவர் சிங்களக் குருக்கள்.

கதிரேசன் திருவுருவத்தை ஞானக் கண்ணால் கண்டவர் உண்டு; ஊனக் கண்ணால் கண்டவர் எவரும் இல்லை. அருவமாய் நின்று அடியார் பல்லாயிரவரை ஆடித் திருவிழாவில் ஆட்கொள்ளும் அறுமுகப் பெருமானை மனமாரப் போற்றி, "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியே! கதிரேசா! தமிழகத்தையும் ஈழ நாட்டையும் இணைத்து நிற்கும் தனிப் பெருந் தெய்வமே! இரு நாடும் என்றென்றும் இசைந்து வாழ அருள் புரிவாய்" என்று திசை நோக்கித் தொழுகின்றோம்.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

மீனம்பாக்கம், சென்னை.
14-1-41

ஒரு கலியாண வீட்டில் முகூர்த்தம் ஆய்விட்டது. இலை போடக் கொஞ்சம் நாழிகை இருந்தது. கூடி உட்கார்ந்திருந்த பெரிய மனுஷர்களில் ஒருவர் நல்லபொழுதாகப் போகட்டுமே என்று அங்கு வீற்றிருந்த ஒருவரைப் பார்த்து "ஏதாவது பாட்டுச் சொல்லுங்களேன்" என்றார். அறிஞர் எக்களிப்பான முகபாவத்தோடு

**"வாழ்வாவது மாயம் உடல்**
**மண்ணாவது திண்ணம்"**

என்று அழுத்தம் திருத்தமாகப் பாட ஆரம்பித்து விட்டார். "என்னடா இப்படி ஆரம்பிக்கிறாரே" என்று எல்லோரும் திகைத்துப் போய் விட்டார்கள். ஒருவர் பார்த்தார்: சரி இனி

**"கைப்பிடி நாயகன் தூங்கையிலே"**

என்று பட்டினத்தார் பாட்டையும் ஆரம்பித்து விடுவார் என்று பயந்து "இலை போட்டாய் விட்டது" என்று சொல்லி எல்லாரும் எழுந்திருக்கும் கலகலப்பில் அறிஞரையும் பாட்டையும் மறக்கடித்தார்.

கலியாண வீட்டை இந்தப் பாடு படுத்தினவர்கள் கம்ப ராமாயணத்தை விட்டா வைப்பார்கள். **கடவுளே! கம்பரைக் காப்பாற்றுவீராக!**

இடைச் செருகல்கள் பற்றி இந்தவிதமாகப் பேசிக் கொண்டே போகலாம். இறுதியில்லாத தத்துவம். ஆனால் உமிக் குவியலைக் கொழித்துக் கொழித்து அரிசியில்லை, அரிசியில்லை என்று சொல்லிக் கொண்டிருப்பதும் ஒரு தொழிலா?

ஆனால் இந்த ஆராய்ச்சியெல்லாம் — **உண்மைக் கவி, போலிக் கவி** — என்கிற ஆராய்ச்சியெல்லாந்தான் அவர்களுக்கு விளங்கவே விளங்காதே!

உதாரணமாக, ஜடாயு உயிர்நீத்த படலத்திலிருந்து "என் தாரம் பற்றுண்ண" என்ற கவி ரொம்ப பாவம் கொண்ட கவியென்றும், அதை அடுத்து வந்த "சொல்லுடையார் என்போல" என்ற கவி செருகல், பிதற்றல் என்றும் காட்டியிருந்தேன்.

கட்டுரையை வாசித்து விட்டுப் புலவர் ஒருவர் நான் தள்ளிய பாட்டுத்தான் மிகச் சிறந்த பாட்டு என்று ஸ்தாபிக்க நீண்ட கட்டுரை ஒன்று எழுதியிருக்கிறார். விசித்திரமான விஷயங்கள் பலவற்றை எழுதியிருக்கிறார். ஆனால் "எண்ணிலாப் பல்லுடையாய்" என்ற சொற்றொடரை ரொம்ப ரொம்ப அலசி அதுவே மிகச் சிறந்த கவித்துவம் உடையது என்று எழுதியிருக்கிறார்,

எண் இலா — எண்ணிக் கணக்கிட முடியாத; பல — எத்தனை எத்தனையோ; உடையாய் — உடைகளைத் தரித்தோனே; என்று அர்த்தம் பண்ணி ஜடாயுவானவன் எண்ண முடியாத Featherly Gowns ஆகிய ஆடையை அணிந்தவன் என்று சொல்லி அதன் அழகை அப்படியும் இப்படியுமாகப் பாராட்டி, அத்தகைய விஷயத்தைக் கொண்ட அற்புதமான கவியை முதலியார் அவர்கள் தள்ளி விட்டார்களே என்று கண்ணீர் வடித்திருக்கிறார். "என் தாரம் பற்றுண்ண" என்ற பாட்டு சாமானியப் பாட்டு என்றும் சொல்லியிருக்கிறார். நாம் சொல்லுவது ஒன்றும் இவர்களுக்குப் புரியாது என்று தெரிகிறதல்லவா.

இங்ஙனம்,
டி. கே. சிதம்பரநாதன்

# பற்களைப் பரிசுத்தமாக்கும் மக்ளீன்ஸ்!

இம் மூன்று கோப்பைகளைப் பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம்.



மக்ளீன்ஸ் பற்களுக்கு இடையிலுள்ள சந்துகளை துப்புரவாக சுத்தம் செய்து

## ஊத்தையை அகற்ற சிறந்த சாதனம்

பற்களின் மேல் படிந்திருக்கும் பாசியில் லிப்பாயிட்ஸ் என்று சொல்லப்படும் அசுத்தம் கலந்துள்ளது. லிப்பாயிட்டை எளிதில் சுத்தம் செய்யமுடியாது. இவை தவறாமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச்சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய லிப்பாயிட்ஸை அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்யவேண்டும். லிப்பாயிட்ஸை கரைக்கக்கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் லிப்பாயிட்ஸை லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச்செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பற்பசையை தினந்தோறும் இரு முறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

**க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்**




MTY-41 TAM




# குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




## ப்ரோடெக்ஸ்
சர்வப்பிரயோக
வாசனைப்பௌடர்

கல்கியின்

# அமரதாரா

ஆனந்தி

அத்தியாயம் 39

## இன்னொரு அதிர்ச்சி

அன்று வீட்டுக்கு வந்து சேர்ந்தேனே தவிர என் மனம் ஒரு நிலையில் இல்லை. கவுண்டரும் லக்ஷ்மியுமாக என்னைக் கொண்டு வந்து சேர்த்து விட்டார்கள். ஆனால் என் மனம்? அதைக் கட்டுப் படுத்த யாரால் முடியும்? யாரால் புரிந்துகொள்ள முடியும்?

ராஜாராமிடம் ரங்க துரையைத் தேடிப் பார்க்க வேண்டுமென்று சொல்லி ஒரு மாதம்கூட ஆகியிருக்கவில்லை. அதற்குள் அவரை நானே பார்த்தேன். ஆனால் என்ன ஏமாற்றம்? அன்பின் சிகரமென்று என் இலட்சிய புருஷராக உருவகப்படுத்திப் பூஜித்து வந்த மனிதரைச் சற்றுக் குறைவாக மதிக்க நேரும்போது ஏற்படும் துன்பத்தை, அனுபவித்தவர்கள்தான் உணர முடியும். அவரைச் சுலோசனாவுடன் பார்த்த உடனேயே என் லட்சியக் கோட்டை தகர்ந்து போய் விட்டது. நான் நினைத்தது சரியல்ல என்பது இப்போது தான் தெரிகிறது. ஆனால் அந்த சமயத்தில், என்னுடைய குழப்பமான மனநிலையும், திடீரென்று ஏற்பட்ட அதிர்ச்சியும் சேர்ந்து அவரை நான் குறைவாக மதிப்பிடும்படி செய்தன.



"சுலோசனா! ரங்கதுரை! சுலோசனா ரங்கதுரை!" என்று மனம் ஜபம் செய்துகொண்டே இருந்தது. அதிலும் சுலோசனா அன்று என்ன அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள்? நல்ல சிவப்புக் கரை போட்ட கறுப்பு நிறப் புடவை உடுத்திக் கொண்டிருந்தாள். தலையை அழகாக எடுத்துக் கட்டி மல்லிகைப் பூ வைத்துக் கொண்டிருந்தாள். அத்தனை மனக் குழப்பத்துக் கிடையிலும் இதைநான் கவனித்து நினைவில் வைத்துக் கொண்டிருப்பது அதிசயமான விஷயம்தான், ஆனால்



பொறாமைக் குணம் ஒரு பெண்ணின் நெஞ்சில் எழும்போது, என்ன வேண்டுமானாலும் நடக்கும் அல்லவா?

'ரங்கதுரையிடமிருந்து கடிதமே வரவில்லை. அவர் என்னை மறந்திருப்பார்' என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ராஜாராம், 'எனக்குக் கடிதங்கள் பல வந்தன' என்று கூறிய பிறகு மறுபடியும் என் ஆசை நிரம்பித் தளும்பிக் கொண்டிருந்தது. நிச்சயம் நிறைவேறும் என்ற உறுதியும் ஏற்பட்டிருந்தது. திடீரென்று இந்த மாதிரி ஒரு காட்சியைப் பார்க்கவே எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியில் யாரைக் கண்டாலும் அளவற்ற கோபம் வந்தது. ஒரு பெண்ணுக்கு நிராசை ஏற்பட்டால் அவளோடு இருப்பவர்கள்பாடு ரொம்பக் கஷ்டம்.

அன்று வீட்டுக்குப் போனபோது ராஜாராம் வீட்டில் இல்லை. அவருக்கு அன்றிரவு ஷூட்டிங் இருந்தது. அதனால் வேறு என் கோபம் அதிகரித்தது. எல்லோர் மீதும் எரிந்து விழுந்தேன். லட்சுமி என்னை உடை மாற்றிக் கொண்டு படுத்துக் கொள்ளச் சொன்னாள். அவளிடம் "உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ!" என்று அதட்டிச் சொன்னேன்.

கவுண்டர் கொஞ்சம் பால் குடிக்கச் சொல்லி வற்புறுத்தினார். அவர் மீதும் கோபம் வந்தது. ஏதோ ஆத்திரத்துடன் பேசினேன். அதை அவர் பொருட்படுத்தவேயில்லை. இரண்டு நாட்களுக்குப் பின் நான் அவர்கள் இருவரிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். அதையும் கவுண்டர் பாராட்டவில்லை. "நீ என் குழந்தை மாதிரி, அம்மா! நீ என்ன செய்தாலும் என் மனத்தை நோகச் செய்யாது" என்று கூறினார்.

ராஜாராம் மறு நாள் காலையில் வந்தபோதுகூட என் ஆத்திரம் தணிந்திருக்கவில்லை. மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு அவரிடம் பேசினேன். ரங்கதுரையைப் பார்த்ததைப் பற்றிக் கூறியவுடன் அவர் முகம் மலர்ந்தது. அதைப் பார்த்ததும் மறுபடியும் எனக்குக் கோபம் வந்தது. "எதற்காக இப்படி ஆனந்தப் படுகிறீர்கள்? முதலில் அவர் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து விட்டுப் பிறகு சிரியுங்கள்" என்று எரிச்சலுடன் சொன்னேன்.

அவருக்கு என் மனநிலை புரியுமா?

"இங்கு இருக்கிறார் என்று தெரிந்த பிறகு கண்டுபிடிப்பது என்ன சிரமம்? நீ இவ்வளவு கவலைப் படுவானேன்? நான் தேடிக் கண்டு பிடித்து விடுகிறேன்" என்றார் ராஜாராம்.

"நாம் இங்கு இன்னும் மூன்று நாட்கள்தான் இருக்கப் போகிறோம் என்பது நினைவிருக்கிறதா?"

"இதற்கு மூன்று நாட்கள் எதற்கு? அப்படி முடியாவிட்டால் நீ கோயமுத்தூருக்குப் புறப்பட்டு விடு. நான்

இருந்து அவரைத் தேடிப் பார்த்து விஷயங்களைச் சொல்லி அழைத்துக் கொண்டு வருகிறேன்."

"நீங்கள் சொன்னாலும் அவர் வர வேண்டுமே?"

"ஏன் வரமாட்டார்?"

"என்னைப் போன்ற ஒரு சினிமாக் காரியைத் தேடி, சீமை சென்று திரும்பிய பெரிய மனிதர் வருவாரா? பெரிய குடும்பத்துப் பெண்ணைத் தேடித்தான் மணந்து கொள்வார்."

"இன்று உனக்கு என்ன ஆகி விட்டது இந்து? ஏன் இப்படிப் பேசுகிறாய்?"

அதன் பிறகு நான் சுலோசனா வுடன் அவர் வந்திருந்ததைப் பற்றிச் சொன்னேன்.

"இதற்கா இவ்வளவு தடபுடல் செய்கிறாய் இந்து? அவர் சீமைக்குப் போய் வந்தவரல்லவா? பெண்களுடன் சகஜமாகப் பழகுகிறார். நாம் சினிமா உலகில் சமமாகப் பழக வில்லையா? நீ இப்போது சொன்ன விஷயத்தால் ரங்கதுரையைத் தேட வேண்டிய இடம் தெரிந்து விட்டது. இப்போது உடனே பத்மநாபன் வீட்டுக்குச் சென்று விசாரித்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறி விட்டுச் சென்றார்.

அவர் திரும்பி வந்த போது மறுபடியும் ஏமாற்றமான செய்தியைத்தான் கொண்டு வந்தார்.

"நான் டாக்ஸியில் போய்ப் பத்மநாபன் வீட்டு வாசலில் இறங்கினேன். பத்மநாபன் கையில் 'வாக்கிங் ஸ்டிக்' குடன் தோட்டத்தில் நடந்து கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் வேகமாக உள்ளே போய் விட்டார். சற்றைக்கெல்லாம் ஒரு ஆள் வெளியே வந்து, 'யார் வேணும்?' என்று அதட்டினான். உடனேயே எனக்கு உள்ளே செல்ல அனுமதி கிடைக்காதென்று தெரிந்து விட்டது.

"'வக்கீல் பத்மநாபனைப் பார்க்கணும்' என்று சொல்லி வைத்தேன். 'ஐயா இங்கு இல்லே. அதெல்லாம் பார்க்க முடியாது' என்றான். 'எப்போது வந்தால் பார்க்கலாம்?' என்று கேட்டேன். 'ஐயா இன்று ஊருக்குப் போகிறார். வருவதற்கு நாலைந்து மாதங்கள் ஆகும்' என்றான்.

"'சின்னம்மா இருக்காங்களா?' என்று கேட்டேன்.

"'அதெல்லாம் ஒருத்தரும் இல்லே. போங்க ஐயா. சும்மா நிக்காதீங்க' என்றான். என் ஜாதக விசேஷம். எங்கு போனாலும் விரட்டி யடிக்கிறார்கள். பிறகும் நான் விடவில்லை.



'இங்கே ரங்கதுரை என்று புதிதாக ஒரு ஆசாமி வருகிறாரே. அவர் எங்கே இருக்கிறாரென்று உனக்குத் தெரியுமா?' என்று கேட்டு விட்டேன்.

"'ரங்கனையும் தெரியாது—துரையையும் தெரியாது. ஐயா சொன்னது சரியாப் போச்சே : உளவு அறிஞ்சுக்கிட்டுப் போக வந்தியா?' என்றான். எனக்கு வந்த கோபத்தில் பளாரென்று ஒரு அறை விட்டேன். பிறகு வேகமாக ஓடி வந்து டாக்ஸியில் ஏறிக் கொண்டு வந்து விட்டேன். ஆனால் அவனை ஏன் அடித்தோம் என்று இப்போது வருத்தமாக இருக்கிறது" என்று கூறி முடித்தார்.

"இனிமேல் நீங்கள் அந்தப் பக்கம் தலை வைத்துக்கூடப் படுக்க முடியாது. நான் வேண்டுமானால் போய்ச் சுலோசனாவைப் பார்க்கட்டுமா?"

"அந்த மாதிரி அசட்டுக் காரியம் மட்டும் செய்யாதே. மறுபடியும் அந்த ருத்ராட்சப் பூனையின் கண்களில் பட்டு ஏதாவது விபரீதத்துக்கு இடம் கொடுத்து விடவே கூடாது. இப்போது நீ மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்."

"அவர் ஏன் உங்களைப் பார்த்து விட்டுப் பார்க்காத மாதிரி போனார்? ஏன் சந்திக்க மறுக்க வேண்டும்? எனக்குப் புரியவே இல்லையே?"

"இது தெரியவில்லையா? பிரசித்தி பெற்றிருக்கும் அமரதாரா இந்துமதி தான் என்று அவருக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்கிறது. பெரிய வக்கீல். அதிலும் பிரமாத அனுபவம் பெற்றவர். இது தெரியாமல் போய் விடுமா? என் மூலமாகத்தான் நீ சினிமா நட்சத்திரமாகி இருக்க வேண்டுமென்று அவரால் ஊகிக்க முடியாதா? இரண்டும் இரண்டும் நாலு என்று தெரிந்து கொள்ள யார் உதவி வேண்டும்? நான் அங்கே போனதும் உன்னைப் பற்றிப் பேச வந்திருப்பேன் என்று பயம் ஏற்பட்டிருக்கலாம். உன் தந்தை மந்திரமூர்த்தியின் உயிலின்படி பணம் கொடுக்க வேண்டுமென்று நாம் கேட்கலாமல்லவா? இப்போது உனக்கும் பணம் இருக்கிறது, நண்பர்களும் இருக்கிறார்கள். அதனால் அவர் பயப்பட மாட்டாரா?"

"அந்த மனிதர் மீது நிஜமாகவே வழக்குப் போட்டுச் சிறைக்கு அனுப்பினால் கூடக் குற்றம் இல்லை. ரங்கதுரையைப் பற்றியும் அவருக்குத் தெரிந்திருக்கும். என்னைப் பார்த்து விடக் கூடாதென்றே சூழ்ச்சி செய்கிறாரோ என்னவோ? சுலோசனாவுக்கும், ரமேஷுக்கும் இப்படிப் பெற்றோர்கள் அமைந்திருக்க வேண்டாம்."

"அதையேதான் நானும் சொல்ல நினைத்தேன். ரங்கதுரையின் கண்களில் நீ பட்டுவிடக் கூடாதென்றே அந்தப் பூனை சூழ்ச்சி செய்து கொண்டிருக்கும். என்னால் இயன்றவரை அவர் இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்கு முயற்சிக்கிறேன்" என்றார் ராஜாராம்.

ராஜாராம் மூன்று நாட்களும் சென்னை முழுதும் அலைந்து திரிந்தார். ஆனால் ரங்கதுரையின் சுவடே தெரியவில்லை. நாங்கள் கோவைக்குப் புறப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. படம் வெளியிட நாள் குறித்து விளம்பரம் செய்து விட்டார்கள். கோவைக்குச் சென்று இன்னும் சில முக்கியமான காட்சிகள் எடுக்கப்பட வேண்டியிருந்தன. நாங்கள் உடனே சென்றால்தான் அந்தத் தேதிக்குள் படம் வெளியிட முடியும். ஆகவே என் துரதிர்ஷ்டத்தை நொந்து கொண்டே நான் கோவைக்குப் புறப்பட்டேன். ஒரு விதத்தில் போவதே நல்லது என்று தோன்றியது. நான் வெளியே போகும்போதெல்லாம் அந்த சாம்பல் நிறக் காரா வந்து தொடராமலிருக்குமல்லவா? ராஜாராமையும் வந்துவிடச் சொன்னேன். அவர் இங்கிருந்து பயனில்லை என்று எனக்கே தெரிந்திருந்தது.

கோவைக்குச் சென்றதும் வெகு வேகமாகப் படத்தின் மற்றக் காட்சிகள் எடுக்கப் பட்டன. ஓய்வு ஒழிவு இல்லை. எல்லோரும் சிரமப்பட்டு உழைத்தார்கள். நான்கு மாதங்களில் படம் முடிவடைந்தது. படம் வெளியிடுவதற்கு இன்னும் இரண்டு நாட்கள்தான் இருந்தன.

படம் வெளியிடுவதற்குமுன் பிரத்தியேகமான காட்சிக்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. டைரக்டரும், ப்ரொட்யூஸரும் சில பிரமுகர்களை அழைத்தார்கள். என்னை அந்தப் பிரத்தியேகக் காட்சிக்கு அவசியம் வர வேண்டும் என்று கூறியிருந்தார்.

# நான்கு மருந்துகள்

## ஒரு டாக்டரின் குறிப்பைப் போன்றது




'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப் பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் :—

1. கொயினு : ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின் : பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின் : ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட் : தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' ஹிருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 41

சில முக்கியமானவர்களுக்கு என்னை அறிமுகப்படுத்த விரும்புவதாகக் கூறியிருந்தார். எனக்கு அதில் விருப்பமோ, உற்சாகமோ இல்லாவிட்டாலும் பாஸ்கரனை அதிருப்திப் படுத்தக் கூடாதென்று வருவதாகச் சம்மதித்திருந்தேன். அன்று மாலை ராஜாராமும் நானும் புறப்பட்டு ஸ்டுடியோவுக்குச் சென்றோம்.

நான் சென்று தியேட்டரில் உட்கார்ந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம் ஒவ்வொருவராக வர ஆரம்பித்தார்கள். பாஸ்கரன் மிக உற்சாகமாக இருந்தார். பாஸ்கரனுடைய மனைவியும், குழந்தைகளும் வந்தனர். கதிர்வேல் அவர்களும் வடிவம்மையும் குழந்தைகளும் வந்தனர். அவர்களுடன் நான் பேசிக் கொண்டிருந்த போது பாஸ்கரன் கூப்பிடுவதாக ராஜாராம் அருகில் வந்து சொன்னார். நான் எழுந்திருந்து கதவருகில் சென்றேன். வெளிப் பக்கத்தில் ஒரு கார் வந்து நின்றது. காரிலிருந்து இறங்கியவரைப் பார்த்து நான் மயக்கமடைந்து விழாமலிருந்தது அதிசயந்தான்.

ஈசுவரமூர்த்தி புன்னகை மலர்ந்த முகத்துடன் பாஸ்கரனைப் பார்த்துக் கை கூப்பினார். பாஸ்கரன் அவரை முதலில் கதிர்வேல் அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். பிறகு ஸ்தம்பித்துச் சிலையாக நின்று கொண்டிருந்த என்னைப் பார்த்து, "இவர்தான் ஈசுவர மூர்த்தி என்பவர்" என்று கூறி விட்டு, அவர் பக்கம் திரும்பி, "இவர்தான் இந்தப் படத்தில் நடித்திருக்கும் அமரதாரா" என்றார்.

ஈசுவர மூர்த்தி என்னைப் பார்த்ததும் கைகூப்பினார். அப்போது அவர் பார்த்த பார்வையில் விஷமச் சிரிப்பு கலந்திருந்ததாக எனக்குத் தோன்றிற்று. 'நீ எப்படி உன் பெயரை மாற்றி வைத்துக் கொண்டாலென்ன? என்னிடம் தப்ப முடியாது' என்று சொல்வது போன்ற அகங்கார பாவம் அதில் த்வனித்தது.

என்னையறியாமல் நான் கை குவித்து விட்டு அசட்டுச் சிரிப்புடன் நின்றேன். போய் உட்கார வேண்டுமென்று கூடத் தோன்றவில்லை.

ஈசுவர மூர்த்தி பாஸ்கரனிடம், "இவளை எனக்குத் தெரியும். இவளுடைய தந்தையும் நானும் நண்பர்கள்" என்று கூறினார். பின்னர் என்னைப் பார்த்து, 'உன்னைப் பார்த்து ரொம்ப நாட்களாகி விட்டன. சௌக்கியந்தானே?" என்று கேட்டார்.

"சௌக்கியம்தான்" என்று நான் கூறியது எனக்கே காதில் விழவில்லை. நல்ல வேளையாக அவர் போய் உட்கார்ந்து கொண்டார். நான் அசையாமல் நின்று கொண்டிருந்தேன். ராஜாராம் எனக்குப் பின்னாலிருந்து, "உஷ்! ஏன் நிற்கிறாய்? போய் உட்கார்ந்து கொள்!" என்று கூறிய பிறகு வடிவம்மைக்கு அருகில் இருந்த நாற்காலியில் போய் அமர்ந்தேன்.

ரங்கதுரையைப் பார்த்த அதிர்ச்சிக்குப் பிறகு ஈசுவரமூர்த்தியைப் பார்த்தது பெரிய அதிர்ச்சியாக இருந்தது. 'எல்லாரும் ஏதேனும் திட்டம் வகுத்துக் கொண்டு இப்படியெல்லாம் நடக்கிறார்களா? அல்லது தற்செயலான சம்பவமா? ராஜாராம் சொன்னது சரிதான். பத்மநாபனுக்கும், ஈசுவரமூர்த்திக்கும் நான் யாரென்று தெரிந்திருக்கிறது. ரங்கதுரையைப் பற்றியும் தெரிந்திருப்பதால் நாங்கள் சந்திக்காமல் இருக்கத் திட்டம் போடுகிறார்கள். பாவிகள், இவர்கள் நன்றாக இருப்பார்களா? ஏன் இவர்கள் தலையில் இடி விழவில்லை?' என்று எண்ணிக் கொண்டே படம் முடியும் வரை உட்கார்ந்திருந்தேன்.

ஈசுவரமூர்த்தியைப் பார்த்தது முதல் நான் பட்ட பாட்டை ஈசுவரன் தான் அறிவார். கொஞ்ச நஞ்சம் பாக்கியிருந்த தூக்கமும் எனக்குப் போய்விட்டது.

அன்று சினிமாக் காட்சி முடிந்ததும், எல்லோரும் படம் மிக நன்றாக இருக்கிறதென்று பாராட்டினார்கள். ஈசுவரமூர்த்தியும் என்னைப் பார்த்து, "பிரமாதமாக நடித்திருக்கிறாயே. உனக்கு இவ்வளவு திறமை உண்டென்பது எனக்குத் தெரியவே தெரியாது. என் நண்பரின் மகள் இவ்வளவு தூரம் கெட்டிக்காரியாக இருப்பதைக் கண்டு நான் பெருமைப்படுகிறேன்" என்றார்.

நான் மறுபடியும் அசட்டுச் சிரிப்புச் சிரித்து வைக்க வேண்டியதாயிற்று. எனக்கு அதை நினைத்தாலே அவமானமாக இருந்தது. அவரைப் பார்த்து நான் சிரித்தேன் அல்லவா? அவரைப்

பார்த்துச் சிரித்த குற்றத்துக்காக எனக்கே என்ன தண்டனை கொடுத்துக் கொள்வதென்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

இரவும் பகலும் பைத்தியக்கார எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருந்தன. 'என்னைப் பார்க்க வேண்டும் என்று இங்கேயே வந்து விட்டால் என்ன செய்வது?' என்று பயமாக இருந்தது. ராஜாராமை வீட்டை விட்டுக் கிளம்பவே நான் விடவில்லை.

நான் எதிர்பார்த்த மாதிரியே ஒரு நாள் நடந்தும் விட்டது. கார் வந்து நின்ற சத்தம் கேட்டு ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். ஈசுவரமூர்த்தி என்று தெரிந்ததும் எனக்கு உடலெல்லாம் பதற ஆரம்பித்து விட்டது. பக்கத்தில் நல்லவேளையாக வள்ளி இருந்தாள். அழுத்தினால் பூட்டிக் கொள்ளுமே அந்த மாதிரி பூட்டு ஒன்று என்னிடம் இருந்தது. அதை அவளிடம் கொடுத்து, "முதலில் இந்த அறையைப் பூட்டி விடு. ராஜாராம் மாமாவிடம் ஓடிப் போய் நான் வீட்டில் இல்லை என்று வருகிறவரிடம் சொல்லச் சொல்லு" என்றேன். வள்ளியும் பூட்டுடன் அறைக்கு வெளியே ஓடினாள். பூட்டின் 'கிளிக்' என்ற ஓசை கேட்ட பிறகு தான் எனக்குச் சற்று நிம்மதி உண்டாயிற்று. ஒரு நிமிஷத்துக்கெல்லாம் பக்கத்து அறையில் பேச்சுக் குரல் கேட்டது.

"வாருங்கள்! வாருங்கள்! நிற்கிறீர்களே? உட்காருங்கள்" என்று ராஜாராம் கூறியது காதில் விழுந்தது. எனக்கு ராஜாராமிடம் பிரமாதமாகக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. இந்தச் சனீசுவரமூர்த்திக்கு என்ன இவ்வளவு வரவேற்பு?

"ஆமாம்! இந்துமதி இல்லையா?"

"இல்லையே. ஸ்டுடியோவுக்குப் போவதாகச் சொல்லி விட்டுக் கிளம்பினாள்" என்றார்.

"நான் ஸ்டுடியோவிலிருந்துதானே வருகிறேன்? டைரக்டர் பாஸ்கரன் இன்று ஷூட்டிங் கிடையாது என்னும் இந்து வரமாட்டாள் என்றும் சொன்னாரே" என்றார் ஈசுவரமூர்த்தி.

"ஒரு வேளை எங்காவது கடை கண்ணிக்குப் போயிருப்பாள். பெண்களுக்குப் பொதுவாகச் சாமான்கள் வாங்கிக் குவிப்பதில் ரொம்ப ஆசை அல்லவா?" என்று ராஜாராம் அசடு வழியச் சம்பந்தமில்லாமல் பேசினார்.

"ஓஹோ! இருக்கலாம். நான் மறுபடியும் மாலையில் வருகிறேன்" என்று கூறி விட்டு அங்கிருந்து போய் விட்டார் ஈசுவரமூர்த்தி.

கார் போன சத்தம் கேட்ட பிறகு தான் எனக்கு நிம்மதியாக மூச்சுவிட முடிந்தது. அவர் போய் இரண்டு நிமிஷங்களுக் கெல்லாம் ராஜாராம் ஜன்னல் வழியாகச் சாவியை வாங்கிக் கதவைத் திறந்தார்.

"என்னத்துக்காக அவரை அவ்வளவு உபசரித்தீர்கள்? நீங்கள் வெறும் வாய்ப் பந்தல்காரர் தான். உள்ளுக்குள் ஒரே பயம்!" என்றேன்.

"ஆமாம்! நீ ரொம்பத் தைரியசாலி. கதவைப் பூட்டச் செய்தாயே?"

"நான் அசந்தர்ப்பமான பேச்சைத் தவிர்க்க விரும்பினேன்!"

"ரொம்ப சமர்த்துத்தான். அவர் இந்தப் பூட்டிய கதவை நூறு தரம் பார்த்திருப்பார். நீ இங்கே தான் இருக்கிறாய் என்று அவருக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். அவர் திரும்பிப் போன போது நடந்த வேகத்தைப் பார்த்தபோதே எனக்குப் பயமாக இருந்தது. நீ உள்ளே இருக்க வேண்டும் என்று அவர் நிச்சயமாய் ஊகித்திருப்பார். எத்தனையோ அனுபவம் வாய்ந்த ஆசாமி அல்லவா? இது தெரியாதா அவருக்கு? நீ அவரைப் பார்க்க விரும்பவில்லை என்ற எண்ணம் அவருடைய கோபத்துக்குத் தூபம் போட்டிருக்கும்", என்றார்.

"என்னை அதற்கு என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"மாலை வந்தால் பார்த்துப் பேசி அனுப்பிவிடு. நான் கவுண்டர் இரண்டு பேரும் கூடவே இருக்கிறோம். அதனால் நீ கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம். அவர் ஒன்றும் அசந்தர்ப்பமாகப் பேச முடியாதல்லவா?" என்றார்.

"சரி! அப்படியே செய்வோம்" என்று சொன்னேன்.

ஆனால் அன்று ஈசுவரமூர்த்தி வரவில்லை. ராஜாராம் அவர் வராமலிருப்பதே கோபத்துக்கு அடையாளம் என்று சொல்லிச் சொல்லிக் கவலைப்பட்டார். (தொடரும்)




# காதலும் கடமையும்

வி. சப்பலக்ஷ்மி

வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டு, ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள் பத்மினி.

"யார் பத்மினி, நம் வீட்டுக்கா!" என்று வினவினேன்.

"அட! அபூர்வமாக இருக்கிறதே! உங்கள் நண்பர் சம்பத் வருகிறார்!" என்று வியப்புடன் கூவினாள் பத்மினி.

"யார், சம்பத்தா!" என்று சந்தேகத்துடன் கேட்டபடியே வாசலுக்கு வந்தேன். ஆமாம்! வண்டியிலிருந்து இறங்கியவன் சம்பத்தேதான்.

"வா, சம்பத்!" என்று மகிழ்ச்சியுடன் நண்பனை வரவேற்றேன்.

"சௌக்கியமா, முரளி! பத்மினி சௌக்கியம்தானே!" என்று கேட்டபடியே வீட்டினுள் நுழைந்தான் சம்பத்.

சம்பத் என் காலேஜ் நண்பன். சென்னையில் சி. ஐ. டி. இலாகாவில் வேலையில் இருந்தான். உத்தியோகத்தில் புலிதான். இந்த இளம் வயதிலேயே தன் திறமையின் மூலம் மேலதிகாரிகளின் அபிமானத்தைப் பெற்றுவிட்டான். அவன், நான் இருந்த கிராமத்துக்கு வருவது அபூர்வம். அதனால்தான் இப்பொழுது அவன் வந்தது எனக்கும், பத்மினிக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது.

"என்ன சம்பத், ஏதாவது வழக்கு விஷயமாக வந்தாயா! காரியமில்லாமல் வருகிற பேர்வழி இல்லையே நீ!" என்றேன்.

"என்ன முரளி, அப்படிச் சொல்லிவிட்டாய்! காரியம் இருந்தால்தான் வர வேண்டுமா! சும்மா வரக் கூடாதா!" என்றான் சம்பத்.

"சரி பேசிக்கொண்டே யிருக்கிறீர்களே! அவரைக் கைகால் கழுவிக் கொண்டு வரச் சொல்லுங்கள். காப்பி சாப்பிட்டபின் பேசிக் கொள்ளலாம்" என்று எனக்கு எச்சரிக்கை விடுத்தாள் பத்மினி.

"வா, சம்பத்!" என்று அவனைக் கிணற்றடிக்கு அழைத்துச் சென்றேன். காப்பி சாப்பிட்டபின், இருவரும் ஒரு பர்லாங் தூரத்தில் இருந்த காவேரி ஆற்றுப் பக்கம் நடந்து சென்றோம். ஆற்று மணலில் இருவரும் உட்கார்ந்து கொண்டோம். காற்று சுகமாக வீசிக் கொண்டிருந்தது.

"என்ன, சம்பத்! இன்னும் எவ்வளவு நாட்களுக்குத் தான் பிரம்மச்சரிய விரதத்தை அனுஷ்டிக்கப் போகிறாய்! எப்பொழுது கல்யாணம் செய்து கொள்வதாக உத்தேசம்!" என்று பேச்சைத் துவக்கினேன்.

"முரளி! அதைப் பற்றிக் கலந்தாலோசிக்கத் தான் உன்னை நாடி வந்தேன். எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது" என்றான் சம்பத்.

"ஏன்!" என்றேன் வியப்புடன்.

அவன் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல், "முரளி, காதல் பெரிதா! கடமை பெரிதா!" என்று கேட்டான்.

"என்ன சம்பத், புதிர் போடுகிறாயே! விளங்கத்தான் சொல்லேன்!"

"முரளி! எங்கள் வீட்டுக்கு மூன்றாவது வீட்டில் ஒரு பெண் இருக்கிறாள். நல்ல அழகி. எனக்கு அவளை மணக்கத்தான் விருப்பம். அவளுக்கும் சம்மதம்தான். என்ன செய்வது! எங்கள் திருமணத்துக்கு ஒரு தடையிருக்கிறது. அந்தப் பெண் அகிலாவின் அண்ணன் மீது ஒரு கொலைக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. அதிலும் என் துரதிருஷ்டம் பார். அவனைப் பிடித்து வந்து ஒப்படைக்கும் பொறுப்பைப் போலீஸ் இலாக்காவில் என்னிடம் ஒப்புவித்து இருக்கிறார்கள். சோதனை போல், அவனும் எங்கோ தலைமறைவாக இருக்கிறான்.

"அகிலாவுக்குத் தன் அண்ணனை விட்டால் வேறு ஆதரவே கிடையாது. இருதலைக் கொள்ளி எறும்பு என்பார்களே, அந்த நிலையில் இருக்கிறேன் நான். கடமைக்காகப் பார்த்தால் அவனைக் கைது செய்ய வேண்டும். காதலுக்காகப் பார்த்தால் அவனைக் கைது செய்ய முடியாது. எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. ஒரு நாள் லீவு வாங்கிக் கொண்டு உன்னிடம் ஆலோசனை கேட்கலாம் என்றுதான் வந்தேன்" என்றான் சம்பத் வேதனையோடு. எனக்கு அவனைப் பார்க்கவே மிகவும் பரிதாபமாக இருந்தது.

"தம்பிக்கும் போலீஸ் இலாகாவில்தான் வேலையா!"—பின்னாலிருந்து ஒரு குரல் இடும் என்று வினவவே, நானும், சம்பத்தும் திடுக்கிட்டுத் திரும்பினோம். கோடி வீட்டுக் கிழவர்



பங்களூர் அட்வொகேட் திரு எஸ்.வி. சுப்பிரமணியம் அவர்களின் குமாரி சௌ. நாகரத்தினத்துக்கும், பங்களூர் அட்வொகேட் திரு கே. எஸ். கிருஷ்ணசாமி அவர்களின் குமாரர் திரு கே. வேங்கடராமன் பி. ஈ.க்கும் ஜூன்மீ 29-ந் தேதி வெகு விமரிசையாக விவாகம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

---

நின்று கொண்டிருந்தார். கிழவருக்கு ஊரில் மதிப்பும் மரியாதையும் அதிகம்.

"உட்காருங்கள், பெரியவரே!" என்றேன்.

கிழவர் எங்கள் எதிரே உட்கார்ந்தார். அவருக்குக் குறைந்தது எழுபத்தைந்து வயதாவது இருக்கும். ஆனால் அவர் உடல் அதிக வயோதிகத் தளர்வுடன் காணாமல் உரமேறியதாக இருந்தது. குரலோ கணீரென்று ஒலித்தது.

"தம்பி, நான் சொல்கிறேனே என்று கோபித்துக் கொள்ளாதீர்கள். காக்கிச் சட்டைக்காரர்களுக்கே காதல் கூடாது. அப்படியே காதல் ஏற்பட்டாலும் நடராஜனைப் போல் ஆக வேண்டியது தான்" என்றார் கிழவர்.

"ஏன்!" என்று சற்றுக் கோபத்துடனேயே கேட்டான் சம்பத்.

"தம்பி! காதல் பொல்லாதது. அது கடமையிலிருந்து கூட நழுவ விட்டு விடும். உறுதி வாய்ந்த நடராஜனையே ஆட்டி வைத்து விட்டது, காதல்!"

நாங்கள் மௌனமாக அவரைப் பார்த்தோம். கிழவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொல்லத் தொடங்கினர்.

* * *

"தம்பி, நடராஜன் ஒரு சப்-இன்ஸ்பெக்டர். அவனுடைய வீரப் புகழைக் கேட்டவர்கள் எல்லோரும் அவன் நாற்பது வயதுக்குக் குறையாத கடுமையான மனிதர் என்று தான் நினைப்பார்கள். ஆனல், நடராஜனுக்கு இருபத்து ஆறு வயதேதான் ஆகி யிருந்தது. சிவந்த மேனியாக, முகத்திலே அரும்பு மீசையுடன் ஆசாமி கம்பீரமாக இருப்பான்.

திடீரென்று மேலதிகாரிகளிடமிருந்து சேலம் பாங்க் ஏஜெண்டைக் கொலை செய்த குற்றவாளி இந்தப் பிராந்தியத்தின் பக்கம் தான் நடமாடுவதாகவும், அவனைப் பிடிக்கும்படியாகவும் நடராஜனுக்கு உத்தரவு வந்தது. அன்றைய தினத்திலிருந்து அலைச்சல்தான் அதிகம் ஏற்பட்டது அவனுக்கு.

இந்தச் சமயத்தில்தான் அவன் வாழ்வில் குறுக்கிட்டாள் அமராவதி. ஒரு நாள் அவன் இந்த ஆற்றுப் பக்கமாக உலாவ வந்த போது, தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்த அமராவதியைப் பார்த்தான். அமராவதி சிவப்பாக இல்லா விட்டாலும், மாநிறத்திலும் சற்று மேலான நிறம். அழகான பெண் தான். நடராஜன் என்னதான் கடுமையானவனாக இருந்த போதிலும், அவனும் இளம் வாலிபன் தானே! அவன் கடமை வாழ்வில் காதல் அரும்பு விட்டது.

அன்றிலிருந்து அவன் வாழ்வுச் சோலையில் இன்பத் தென்றலாக வீசினள் அமராவதி. அவளைப்பற்றி விசாரித்து அறிந்து கொண்டான் நடராஜன். ஆற்றின் ஓரமாக உள்ள வீட்டில் தனிமையாக இருந்தாள் அமராவதி. அவள் இந்த ஊருக்கு வந்து சில நாட்கள் தான் ஆகி யிருந்தன. அவளுக்கும் நடராஜனுக்கும் எப்பொழுது பரிச்சயம் ஏற்பட்டது? எப்பொழுது இருவரும் பேசிக் கொள்ள ஆரம்பித்தார்கள் என்பதைப்பற்றி யெல்லாம் என்னிடம் கேட்காதீர்கள். அது அவர்களுக்குத்தான் தெரியும்.

காதல் ஒரு புறம் இருந்தாலும், கடமையை ஒரு புறம் கவனித்துக் கொண்டுதான் வந்தான் நடராஜன். அந்தக் கொலையாளியை மட்டும் கண்டு பிடிக்கவே முடியவில்லை. மேலிடத்திலிருந்து இரண்டு முறை தாக்கீது வந்து விட்டது. நடராஜன் செய்வதறியாது தவித்தான். ஊரில் சந்தேகப்பட்டவர்களது வீடுகளை யெல்லாம் சோதனை போட்டதைத் தவிர, பலன் ஒன்றும் கிடைக்கவில்லை.

அன்று மாலை சோர்ந்து போய் அமராவதியின் வீட்டை நோக்கி நடந்தான் நடராஜன். எந்த வேலையிலும் தினம் ஒரு முறை அவளைச் சந்தித்துப் பேசா விட்டால் அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. அவன் அமராவதியின் வீட்டை அடைந்த போது வாசற்கதவு தாளிடப்பட்டிருந்தது. 'அமராவதி' என்று கூப்பிட வாயெடுத்தவன் உள்ளிருந்து வந்த மெல்லிய பேச்சுக் குரலைக் கேட்டதும், திடுக்கிட்டுப் போனன்.

'அமராவதி! இந்த சப்-இன்ஸ்பெக்டர் பொல்லாதவன். இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாளைக்கு என்னைக் கண்டு பிடித்து விடுவான். தற்சமயம் அவன் தான் எனக்குப் பகைவன். ஆனல், நீ அவனைக் காதலிக்கிறாய். அவன் வாசலோடு நின்று பேசி விட்டுப் போனாலும், அவன் போகும் வரை என் நெஞ்சு பக்பக் கென்று அடித்துக் கொள்கிறது. ஹூம்! என்றைக்கு அவன் கையாலேயே நான் சிறைக்குப் போகப் போகிறேனே!' என்றது ஒரு ஆண் குரல்.

நடராஜன் காதுகளை நன்றாகத் தீட்டிக் கொண்டான்.

'பயப்படாதே, அண்ணா! இந்த வீட்டில் இருக்கிற வரை உனக்கு எந்தவிதமான ஆபத்தும் இல்லை. இங்கிருந்து ஒரு அடி வெளியே எடுத்து வைத்தால்கூட உன்னைப் போலீஸார் பிடித்துக் கொள்வார்கள். ஆனல், உள்ளே இருக்கிற வரையிலும், நான் இருக்கும் போது நீ ஏன் பயப்பட வேண்டும்! இன்வ்

பெக்டர் எனக்காக எதுவும் செய்வார். நீ இங்கே இருக்கிறாய் என்று அவர் என்னையும் சந்தேகிக்க வில்லை. ஊரில் உள்ள வீடுகளையெல்லாம் சந்தேகப்பட்டுப் பரிசோதித்த அவர், நம் வீட்டைச் சோதனை போடாததிலிருந்தே அவருக்கு என்மேல் எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்பது தெரியவில்லையா!' — இது அமராவதியின் குரல்.

நடராஜனுக்கு உலகமே சுழல்வது போல் இருந்தது. அமராவதியின் சகோதரன் தானா அந்தக் கொலைகாரன் மாணிக்கம்! அவன் காதலி ஒரு கொலைகாரனின் சகோதரியா! என்ன மதியீனம்! அமராவதி தனியாக இருக்கிறாள் என்ற நம்பிக்கையில் அவள் வீட்டைச் சோதனை போடாதிருந்து விட்டானே! இந்தச் செய்தி வெளியானால் அவன் திறமையை எல்லோரும் பரிகசிப்பார்களே!

'அமராவதி! இந்த நடராஜனை நீ இன்னமும் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை' என்று பல்லைக் கடித்தவாறு மனத்துக்குள் எண்ணியபடி நடராஜன் வீட்டைச் சுற்றிப் பின்புறமாக வந்தான். பின்புறச் சுவர் சின்னதாகத்தான் இருந்தது. சப்தமில்லாது ஏறிக் குதித்து வீட்டினுள் நுழைந்தான். வீட்டின் கூடத்திலே அமராவதியும் முப்பது வயது மதிக்கும்படியான ஒரு மனிதனும் நின்று கொண்டிருந்தனர்.

'அண்ணா! இன்ஸ்பெக்டரே நமக்குப் பாதுகாப்பாக இருக்கிறார். நான் இன்ஸ்பெக்டரின் அன்பைக் கவர்ந்தவள் என்பதினால் தான், யாரும் நம் வீட்டை நெருங்குவதில்லை. சரி, அவர் வரும் நேரமாகி விட்டது. நீ போய் உன் அறைக் கதவைத் தாளிட்டுக் கொள்'' என்று எச்சரித்த அமராவதி பின்னாலிருந்து எழுந்த கனைப்புச் சத்தத்தையும், அதைத் தொடர்ந்த ஏளனச் சிரிப்பொலியையும் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். கையில் கைத்துப்பாக்கியுடன், கடுமையாக நிற்கும் இன்ஸ்பெக்டரைப் பார்க்கவும் இருவரும் வெலவெலத்துப் போய் விட்டனர்.

'இன்ஸ்பெக்டரா!' என்று வெளிறிய முகத்துடன் கூவினாள் அமராவதி.

'ஆமாம், நான் தான். அமராவதி! என்னை ஒரு நாள், இரண்டு நாள் ஏமாற்றலாம்; முழுக்க ஏமாற்ற முடியாது. தெரியுமா! மாணிக்கம் எத்தனை நாள் தான் இந்த வீட்டில் அடைந்து கிடப்பான், பாவம்! வா, அப்பா! உன்னை வெளி உலகுக்கு அழைத்துச் செல்கிறேன்' என்று ஏளனமாகச் சொல்லியபடியே, எப்பொழுதும் முன் ஜாக்கிரதையுடன் கால் சட்டைப் பையில் வைத்திருக்கும் விலங்கை எடுத்தான் நடராஜன்.

மாணிக்கத்தின் முகம் சாவுக்களையை அடைந்தது. அமராவதி கண்களில் நீர் பெருக நடராஜனின் கால்களைப் பிடித்துக் கொண்டு, 'ஐயா! தயவு செய்யுங்கள். என் அண்ணன் ஒருவர்தான் எனக்கு ஆதரவு. அவரை என்னிடமிருந்து பிரிக்காதீர்கள்' என்று கெஞ்சினாள்.

'காலை விடு, அமராவதி!' என்றான் அவன் கடுமையாக.

அப்போது தான் தம்பி, நீங்கள் சற்று முன் கேட்டீர்களே, அந்தக் கேள்வியைக் கேட்டாள் அமராவதி.

'ஐயா தங்களுக்குக் காதல் பெரிதா! கடமை பெரிதா!' என்று கேட்டாள்.

நடராஜன் தயங்காமல் பதில் சொன்னான். 'காதல், கடமை இரண்டும் என் இரு கண்கள். இரண்டு கண்களில் நான் பாரபட்சம் காண்பிப்பதில்லை. இரண்டும் ஒன்று தான்' என்றான்.

'ஐயா, தாங்கள் என்னைக் காதலிப்பது உண்மையானால், எனக்காக என் அண்ணனைக் காப்பாற்றக் கூடாதா!'

'அமராவதி! சட்டம் ஒரு சர்ப்பம். அதனுடன் என்னை விளையாடச் சொல்கிறாயா!'

'நீங்கள் மனம் வைத்தால் அந்தச் சர்ப்பத்துக்கும் மகுடி ஊதி மயங்க வைக்க முடியாதா!' என்று சவால் விட்டாள் அமராவதி.

தம்பி, காதலுக்கும் பொல்லாத சக்தி இருக்கிறது. அந்தக் கடமை வீரனும் கலங்கி விட்டான். எந்தச்சக்திக்கும் பணியாத நடராஜனின் வைரம் பாய்ந்த நெஞ்சம் அமராவதியின் சவாலினால் ஆட்டம் கண்டு விட்டது. அவனது தடுமாற்றத்தை அவனுடைய முக பாவத்தின் மூலமே உணர்ந்து கொண்ட அமராவதி தனது கடைசி அஸ்திரத்தையும் அவன்மீது வீசினாள்.

'ஐயா, நீங்கள் என் அண்ணனைக் கைது செய்தால், உங்கள் காதலி அமராவதியை



உயிருடன் காண முடியாது. அண்ணனைக் கைது செய்த அரைமணி நேரத்துக்கெல்லாம் அமராவதியின் உயிர் பிரிந்து விடும்!'

நடராஜனுக்கு ஒரே குழப்பமாகி விட்டது. அந்தக் குழப்பத்தில் அவர்களுக்கு என்ன பதில் சொன்னானோ, எப்போது அவன் அங்கிருந்து வீட்டை அடைந்தானோ, அது அவனுக்கே தெரியாது.

வீட்டில் வந்து உட்கார்ந்த நடராஜன், தான் செய்த காரியம் சரியா, தப்பா என்று சிந்தித்தான். சிந்தனையில் மூழ்கிக் கிடந்த அவனை, 'நடராஜா' என்று அழைத்த பாட்டனாரின் குரல் விழிப்படைய வைத்தது. பாட்டனார் நாகலிங்கம் அவன் அருகே வந்து அமர்ந்தார்.

நாகலிங்கம் மாஜிக் கான்ஸ்டபிள். முதலில் கான்ஸ்டபிளாக இருந்து தம் சேவையின் மூலம் ஹெட்கான்ஸ்டபிளாக மாறினவர். அவருடைய மகன், நடராஜனின் தந்தை பொன்னையாவும் அவரைப் பின்பற்றி ஹெட்கான்ஸ்டபிளாகப் பணியாற்றினான். இப்படியாக அந்தப் பரம்பரையே மூன்று தலைமுறைகளாகப் போலீஸ் இலாகாவுக்குப் பணியாற்றிக் கொண்டு வந்தது.

'நடராஜா! ஏன் இப்படிச் சோர்ந்து போய் உட்கார்ந்திருக்கிறாய்!' என்று பரிவுடன் விசாரித்தார் நாகலிங்கம். நடராஜன் தாத்தாவிடம் எந்த விஷயத்தையும் மறைக்க மாட்டான். பொன்னையா அகால மரணம் அடைந்த பின் நாகலிங்கம் தான் தன் பென்ஷன் பணத்தைக் கொண்டு சிரமப்பட்டு நடராஜனைப் படிக்க வைத்து சப்-இன்ஸ்பெக்டராக்கினார். அதனால், நடராஜனுக்குத் தாத்தாவிடம் அலாதியான பாசம் உண்டு. அவனையும் மீறி மாலை நடந்த சம்பவத்தைச் சொல்லி விட்டான்.

அவ்வளவையும் பொறுமையுடன் கேட்டு வந்த நாகலிங்கத்தின் முகம் கோபத்தினால் 'ஜிவ்' வென்று சிவந்து விட்டது. 'நடராஜா, என்ன காரியம் செய்தாய்! நானும் உன் அப்பனும் தொண்டாற்றிய உத்தியோகத்துக்கே களங்கம் ஏற்படுத்தி விட்டாயே. லஞ்சம் வாங்குவதைப் போல, காதலுக்காகக் கடமையைக் கை விட்டாயே! என் வம்சத்தில் பிறந்தவனா நீ!' என்று ஆத்திரத்துடன் படபடவென்று பொரிந்து தள்ளினார் நாகலிங்கம்.

நடராஜன் மௌனமாக இருந்தான். அவமானம் அவன் உடலைக் குன்ற வைத்தது. குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தான். நாகலிங்கத்துக்குப் பேரன் மீது பிரியம் அதிகம். ஆனால், அதைவிடப் போலீஸ் இலாகாவின் மீது பக்தி அதிகம். குற்றவாளிகளைத் தண்டித்து, நீதியை நிலைநாட்ட நியமிக்கப்பட்டிருந்த போலீஸ் இலாகாவில் தொண்டாற்றுவதே பெரிய பாக்கியம் என்று அவர் கருதி வந்தார். அப்படியிருக்க நடராஜன் கடமை தவறிய குற்றத்தை அவரால் மன்னிக்கவே முடியவில்லை.

'நடராஜா! நான் போலீஸ் இலாகாவுக்கு முப்பது வருஷ காலம் உழைத்திருக்கிறேன். நான் மட்டும் அந்தக் காலத்தில் படித்திருந்தேனானால், என் முயற்சியின் மூலம் போலீஸ் இலாகாவிலேயே ஒரு உன்னத நிலையை அடைந்திருப்பேன். ஆனால் எனக்குப் படிப்புக்

குறைச்சல். உன் தந்தையும் அவ்வளவு படிக்கவில்லை. நாங்கள் இருவரும் முன்னுக்கு வர முடியவில்லை. நீ படித்தவன்; கடமை ஒன்றே தான் உன் வாழ்க்கை லட்சியம். அந்த லட்சியத்தின் மூலம், நானும் பொன்னையாவும் அடைய முடியாத உன்னத நிலையை நீ அடைந்துவிடுவாய் என்று நான் பிரமாதமாகக் கனவு கண்டு வந்தேன்.

'பொன்னையா எப்படி இறந்து போனான்! கடமையைக் காப்பாற்றத் தன் மாமனாரையே கள்ளச் சாராயம் காய்ச்சிய குற்றத்துக்காகக் கைது செய்ய வேண்டியிருந்தது. மாமனாராயிற்றே என்று பொன்னையா தயங்கினானா! உன் அம்மா எவ்வளவோ கெஞ்சினாள், தன் தந்தையைக் கைது செய்ய வேண்டாம், தங்கள் குடும்பக் கௌரவம் போய் விடும் என்று. ஆனால், பொன்னையா கேட்கவில்லை. அவன் மாமனாரைப் பிடிக்கப் போகும் போது, ஆத்திரம் கொண்ட அவன் மைத்துனன் அரிவாளால் தாக்கவே பொன்னையா இறந்து போனான். அவன் குலத்தில் உதித்த நீயா இப்படி நடந்து கொண்டாய்! என் மூன்றாம் தலைமுறையா, கடமையிலிருந்து தவறினான்! என் பேரன் நடராஜனா ஒரு பெண்ணுக்காகக் கடமையைக் கைவிட்டான்! சீ! வெட்கக் கேடு! கேட்கவே நாராசமாக இருக்கிறது. உன் உடம்பில் ஓடுவது போலீஸ் இரத்தம், நடராஜா! உன்னை நான் வளர்த்தது, போலீஸ் இலாகா தந்த பணம். கடமைக்கு நீ துரோகம் செய்தால், உனக்கு நீயே துரோகம் செய்து கொண்டாற் போல்தான்' — நாகலிங்கம் ஆவேசத்தோடு பேசினார். உணர்ச்சி வசத்தால் அவர் உடல் நடுங்கியது. அவர் ஆயாசத்துடன் கண்களை மூடித் திறந்த போது, நடராஜன் அவர் முன் இல்லை!

நடராஜனின் இதயத்தில் மங்கிக் கொண்டிருந்த கடமை விளக்கு, பாட்டனாரின் ஆவேசப் பேச்சினால் சுடர் விட்டுப் பிரகாசித்தது. அதிலிருந்து தீப் பொறிகள் நடராஜனின் கண்கள் வழியாகச் சிந்தின. அந்த நிமிஷமே ஆறு கான்ஸ்டபிள்களுடன் அமராவதியின் வீட்டை நோக்கி நடந்தான்.

நான்கு கான்ஸ்டபிள்களை வீட்டைச் சுற்றி நிற்க வைத்து விட்டு, இரண்டு கான்ஸ்டபிள்களைத் தன்னுடன் வைத்துக்கொண்டு வீட்டின் கதவைத் தட்டினான்.

'அமராவதி!' என்று அழைத்த அவன் குரல் அவனுக்கே புரியாத வகையில் அசாதாரணமாக ஒலித்தது.

கதவைத் திறந்த அமராவதிக்கு, இன்ஸ்பெக்டரையும், அவருடன் நிற்கும் கான்ஸ்டபிள்களையும் பார்க்கவே தலை சுற்றியது. வீட்டை ஒருமுறை பார்த்த நடராஜனுக்கு அமராவதியும், மாணிக்கமும் வெளிக் கிளம்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள் என்பது நன்றாகத் தெரிந்து விட்டது. ஆமாம்! அவர்கள் அவனை நம்பவில்லை!

அவர்களைப் பார்க்கவும் ஓடப் பார்த்த மாணிக்கத்தை, இரண்டு கான்ஸ்டபிள்களும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். மற்ற கான்ஸ்டபிள்களும் உள்ளே நுழைந்தனர். மாணிக்கத்தின் கையில் இரும்புக் காப்பு மாட்டப்பட்டது. 'அண்ணா' என்று அலறிய அமராவதி மயங்கிக் கீழே விழுந்தாள்.



தென்னிந்திய அர்ச்சகர் சங்கத்தின் தலைவரும் மதுரை மீனாக்ஷிசுந்தரேசுவர ஆலய அர்ச்சகருமான ஸ்ரீ சோமசுந்தர பட்டர் அவர்களின் புதல்வன் கண்ணன் என்கிற ஸ்ரீ எஸ். சுப்பிரமணியனுக்கும், கடம்பர் கோவில் ஸ்தானீகரான ஸ்ரீ ஆர். தெய்வசிகாமணி குருக்களின் புதல்வி பாலா என்கிற செள சுவர்ணலதாவுக்கும் ஜூன் 30-ம் தேதி குளித்தலை கடம்பர் கோயிலில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள் !

நடராஜன் மயங்கி விழுந்த அமராவதியை ஒரு கணம் பார்த்தான். பின் தயங்கி நின்ற கான்ஸ்டபிள்களைப் பார்த்து, 'இழுத்து வாருங்கள், இந்த ராஸ்கலை!' என்று சொல்லி விட்டு முன்னே நடந்தான்.

அவன் போலீஸ் ஸ்டேஷனை அடைந்து ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம், ஒரு ஆள் ஓடி வந்து, 'ஐயா! இன்ஸ்பெக்டர் ஐயா, ஆற்றங் கரைக்குப் பக்கத்திலே ஒரு வீடு இருக்கிறது பாருங்க, அந்த வீட்டில் இருக்கிற பெண் தன் மேலே மண்ணெண்ணெயை ஊற்றித் தீ வைத்துக் கொண்டு விட்டதுங்க. சீக்கிரம் வாங்க" என்று பதறிக் கொண்டே கூறினான்.

நடராஜன் அதிகம் பரபரப்பு அடையவில்லை. போலீஸ்காரர்களிடம் மாணிக்கத்தை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு ஒரு போலீஸ்காரருடன் அமராவதியின் வீட்டுக்குச் சென்றான். ஆனால் அவன் போவதற்குள் காரியம் மிஞ்சிவிட்டது. அங்கே அமராவதியைக் காண முடியவில்லை. உருச் சிதைந்து கருகிப்போன உடலைத்தான் காண முடிந்தது. அமராவதி தன் சபதத்தை நிறைவேற்றியே விட்டாள்! நடராஜன் இதைத் தற்கொலை வழக்கு என்று பதிவு செய்து கொண்டானே தவிர, வேறு எவ்விதமான அக்கறையும் காட்டவில்லை. மாணிக்கத்துக்கு ஆயுள் சிறை வாசம் கிடைத்தது.

இந்த வழக்கில் பூரண வெற்றி கண்டதினால், அவன் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக உயர்த்தப் பட்டான். கடமையைச் சரியான சமயத்தில் காப்பாற்றிவிட்ட அவன், மேலும், மேலும் பதவியில் உயர்த்திக் கொண்டே போகப் பட்டான். இப்பொழுது நடராஜன், ஜில்லா போலீஸ் அதிகாரி. ஆனால் அவன் உள்ளத்தில் அரும்புவிட்ட காதல், அரும்பாகவே அழிந்து விட்டது. அது மலர்வதற்குள் கடமை குறுக்கிட்டு விட்டது. காக்கிச் சட்டைக்காரர்களுக்குக் காதல் கூடாது என்று நான் சொன்னது சரிதானே!"

* * *

கிழவர் கதையைக் கூறி முடித்தார். "ஏன் பெரியவரே, அப்புறம் நடராஜன் விவாகம் செய்து கொள்ள வில்லையா!" என்றேன்.

"இல்லை தம்பி. ஒரு பெண்ணினால்தானே, அவன் கடமையை விட்டு விலக நேரிட்டது! அதனால் தன் வாழ்வில் பெண்களுக்கே இடம் கிடையாது என்று உறுதியாக இருக்கிறான்" என்று பெருமூச்செறிந்தார் கிழவர்.

திடீரென்று சம்பத் கேட்டான். "பெரியவரே! நீங்கள்தானே நாகலிங்கம்!"

"ஆமாம், உங்களுக்கு எப்படித் தெரியும்!"

"தெரியும், பெரியவரே! நான் டி. எஸ். பி. நடராஜனைப் பார்த்திருக்கிறேன். அவர் முக ஜாடை உங்களுக்கும் இருக்கிறது. அதன் மூலம் கண்டு கொண்டேன்" என்றான்.

"அடே! பெரிய துப்பறிந்து விட்டாயே!" என்றேன் நான்.

"தம்பி, இந்தக் கிழவனின் ஆசையை, லட்சியத்தை, நடராஜன் நிறைவேற்றி விட்டான். போலீஸ் இலாகாவில் உன்னத நிலையை அவன் அடைந்து விட்டான். இன்னும் அவன் உயர்ந்து விடுவான். ஆனால் என் பரம்பரை மூன்றும் தலை முறையுடனேயே நின்று விடுவதுதான் எனக்கு வேதனையளிக்கிறது. ஆனால், நடராஜனின் உறுதியை யாராலும் அசைக்க முடியாது" என்று ஏக்கத்துடன் சொன்னார் கிழவர்.

"வருகிறோம், பெரியவரே" என்று சொல்லி விட்டு மணலைத் தட்டிக் கொண்டு எழுந்தோம். வழியில் சம்பத் மௌனமாகவே வந்தான். சாப்பிட்ட பின், "இன்று இரவே ஊருக்குப் புறப்படுகிறேன், முரளி!" என்றான். நான் தங்கச் சொன்னாலும் அவன் தங்க மாட்டான். ஆதலால், "சரி. போய் வா! என்ன முடிவு செய்திருக்கிறாய்!" என்று கேட்டேன்.

"ஏற்கனவே குழம்பிக் கிடந்த மனத்தைக் கிழவர் வேறு அதிகமாகக் குழப்பி விட்டார். அதனால் நான் ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுகிறேன்" என்றான் சம்பத். ஒரு வாரம் சென்ற பின் அவனிடமிருந்து கடிதம் வந்தது. ஆவலோடு பிரித்தேன். நல்ல செய்திதான்.

"அன்புள்ள முரளி!

நான் சுகமாகச் சென்னை வந்து சேர்ந்தேன். கடமைக்கும், காதலுக்கும் நடந்த போராட்டத்தில் கடமையே வெற்றி பெற்றது. அகிலாவின் அண்ணனைத் தேடிப் பிடித்துக் கைது செய்தேன். ஆனால் உண்மைக் குற்றவாளி வேறு ஒருவன் இரண்டு நாட்களுக்கு முன் அகப்பட்டு விட்டான். சட்டம் புதிர் அவிழ்த்துவிட்டது. சந்தர்ப்ப வசத்தால் அகிலாவின் அண்ணன் குற்றவாளியாகக் கருதப்பட்டான். இப்பொழுது அவன் நிரபராதி என்று தீர்ப்பாகி விட்டது. அடுத்த மாதம் எங்கள் திருமணம். ஒரு செடியில் காய்க்கும் காய்கள் அத்தனையுமே நன்றாக இருப்பதில்லை. அவற்றில் சில வெம்பித்தான் போகின்றன. காக்கிச் சட்டைக்காரர்களுக்குக் காதல் கூடாது என்ற சொன்ன பெரியவரிடம் இதைச் சொல்லவும். திருமணத்துக்கு நீயும், பத்மினியும் வரவேண்டும். சம்பத்"

ஆஸ்பிரின் (அஸிடில் ஸாலிஸிலிக் ஆஸிட்)
அற்ற ஆச்சரிய நிவாரணி



# ஸாரிடான்

## வலியை விரட்டுகின்றது

### நிவாரணமளிக்கிறது

ஸாரிடான், வலியை உடனே நிறுத்துகிறது—பெரும்பாலும் ஒரு இரண்டணா வில்லையே போதும்.





### ஊக்கமளிக்கிறது

ஸாரிடான், உங்கள் நரம்புகளுக்கு சாந்தியளிக்கிறது. வலியினுடன் உண்டான சங்கடமான உணர்ச்சியை நீக்க உதவுகிறது



**2 அணா**

**ஒவ்வொரு வில்லையும் ஒரு பூர்த்தியான டோஸ்**

**வயிற்றுக்கோளாறோ பின் தளர்ச்சியைக் கொடுப்பதோ இல்லை**

உங்களுக்குத் தலைவலியோ, பல்வலியோ அல்லது மற்ற எவ்விதமான வலியாகிலும் சரி, உடனே ஸாரிடான் உட்கொள்ளவும். ஸாரிடான உங்கள் வயிற்றைக் கெடுக்காமலும், சோர்வு உண்டாக்காமலும் உடனேயே வலியிலிருந்து நிவாரணம் அளிக்கிறது.

ஆனால் ஸாரிடான் அத்துடன் தன் வேலையை நிறுத்திக்கொள்வதில்லை. உடனேயே இது உங்களை சீரான நிலைக்குக் கொண்டுவந்து குதூகலம் உண்டாக்குகிறது. வலியினால் ஏற்பட்ட சங்கடத்தைக் குறைக்கிறது. சிறிது நேரத்தில் நீங்கள் தெம்புடனும், மறுபடியும் உற்சாகத்துடனிருப்பதை உணர்வீர்கள்!

இது சாதாரண வலி மருந்தினின்றும் சிறந்தது என்பதை உணர்ந்ததற்கு ருசுவாக எப்பொழுதும் ஸாரிடான் வில்லைகளை கொஞ்சம் கைவசம் வைத்துக் கொள்ளவும்.

### தெம்பூட்டுகிறது

ஸாரிடான், உங்களுக்கு இலேசாக உற்சாகமளிக்கிறது. சில நிமிஷங்களில் மறுபடியும் சௌகரியமாகவும், பரிசுத்தமாகவும் உணரச் செய்கிறது!





ஸாரிடான் ரேடியோ நேரம் — ஸாரிடான் சார்பில் அளிக்கும் இந்தியாவின் மிகச் சிறந்த சினிமா நிகழ்ச்சியை ரேடியோ ஸிலோனில் ஒவ்வொரு திங்கட்கிழமை இரவு 8 மணிக்கு 41 மீட்டர்களில் கேளுங்கள்.




# அன்புமனம்

"கிருஷ்ணா"

"விமலா!" என்று இனிய குரலில் மிருதுவாகக் கூப்பிட்டான் செல்வராஜன்.

"என்ன!" என்று விழிகளில் விளக்கம் ததும்ப அவனை நிமிர்ந்து பார்த்தாள் விமலா.

"விமலா! உன் மனசில் என்னதான் எண்ணிக் கொண்டிருக்கிறாய்! அதைப் பற்றி முடிவாக ஒரு வார்த்தை என்னிடம் இப்பொழுதாவது சொல்ல மாட்டாயா!" என்று இரங்கும் பாவனையில் கெஞ்சினான் அவன்.

"என் மனசிலா! இந்தச் சமயத்தில் எதைப் பற்றிச் சதா எண்ணிக் கொண்டிருக்க வேண்டுமோ, அதைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். அதாவது பரீட்சையின் முடிவைப் பற்றி!" என்று உறுதியான குரலில் சொன்னாள் அந்தப் பொல்லாதவள்.

ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அருகில் பஸ் நிற்கும் இடத்தில் இருவரும் மாம்பலம் போகும் பஸ்ஸுக்காக நின்று கொண்டிருந்தார்கள். உச்சி வேளையாதலால் சற்றுக் கூட்டம் குறைந்திருந்தது. பஸ்ஸுக்காகத் தவம் கிடக்கும் நேரத்தில் சற்றுத் தாராளமாகவே விமலாவுடன் பேசலாம் என்று திட்டமிட்டிருந்தான் செல்வராஜன். அன்றைக்கென்று பஸ் சீக்கிரமாகவே வந்து அவன் ஆசையில் மண்ணைத் தூவியது.

செல்வராஜனும் ஜெயராமனும் விமலாவின் சொந்த அத்தையின் பிள்ளைகள். செல்வராஜன் இளையவன். ஜெயராமன் மூத்தவன். ஜெயராமன் மெட்ரிகுலேஷனுடன் தனது படிப்பை நிறுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. செல்வராஜனோ வைத்தியக் கல்லூரியில் படிப்பை முடித்து விட்டு, ஆஸ்பத்திரியில் பயிற்சி பெற்று வந்தான். விமலாவும் தன் அத்தை வீட்டிலேயே இருந்து கொண்டு வைத்தியக் கல்லூரியில் படித்து வந்தாள்.

விமலாவின் கவர்ச்சிகரமான தோற்றம், செல்வராஜனையும் ஜெயராமனையும் மயக்கமுறச் செய்தது.

எத்தகைய சூறாவளிக்கும் அசையாத கம்பீரமான மலைச் சிகரத்தைப் போல இருந்தது விமலாவின் உள்ள நிலை. அதன் அந்தரங்கத்தை இருவராலும் அறிய முடியவில்லை.

செல்வராஜனும் ஜெயராமனும் அழகில் சிறந்தவர்கள்தான். அறிவிலும் அவ்வாறே. ஆயினும் 'தன்னைவிட விமலாவுக்கு ஏற்றவன் தம்பியே' என்று நினைத்தான் ஜெயராமன்.

காரணம், துர்ப்பாக்கியசாலியான ஜெயராமன் கார் விபத்தில் துரதிர்ஷ்டவசமாகத் தனது பதினாறாவது வயதில் காலை இழந்து விட்டதுதான்.

இவனுக்கு நேர்மாறானவன் செல்வராஜன். விமலாவுடன் சேர்ந்தாற் போலக் கல்லூரிக்குப் புறப்படுவதும் திரும்பச் சேர்ந்தாற்போல வருவதும், அடிக்கொரு தரம் பாடங்கள் சம்பந்தமாகக் கேள்விகள் கேட்டுப் பதில் வாங்குவதுமாக, விமலாவும் செல்வராஜனும் சேர்ந்து மனம் விட்டுப் பழகக் கணக்கில்லாத சந்தர்ப்பங்கள் கிடைத்தன.

இந்தச் சந்தர்ப்பங்களை யெல்லாம் நழுவ விடாமல் செல்வராஜன் விமலாவிடம் தன் உள்ளத்தைச் சிறிதும் ஒளிக்காமல் திறந்து காட்டியிருக்கிறான். என்ன செய்தும்கூட விமலா தன் வாயைத் திறந்து தன் உள்ள நிலையை ஒரு போதும் அவனிடம் சொன்னவளல்ல. அவனுடைய பேச்சுக்களைக் கவனித்

தால் அவன் விவாகத்தையே சிறிதும் விரும்ப வில்லை போலிருந்தது.

*　　　*　　　*

இங்கிலேயில்தான் திடீரென்று விமலாவின் தகப்பனார் நீலகண்டம், தம் பெண்ணின் கல்யாண விஷயமாக முடிவு செய்வதற்காகச் சென்னைக்குத் தம் சகோதரியை நாடி வந்தார். அன்று பகலில் போஜனத்துக்குப் பிறகு சாவகாசமாக ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்து வெற்றிலையை மென்று கொண்டே, தம் சகோதரியை நோக்கி, "ஜானகி, இந்த ஆவணிக்குள் செல்வராஜனுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்துவிட வேண்டியதுதானே!" என்றார்.

கீழே குனிந்து அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த ஜானகியம்மாள் இதைக் கேட்டதும் முறத்தை அப்படியே கீழே வைத்து விட்டு நிமிர்ந்தாள். அவளது முகம் சிறிது வாட்ட மடைந்தது.

"என்ன அண்ணா அப்படி ஒரு வார்த்தை பேசி விட்டாய்! மூத்தவன் இருக்கும் பொழுது இளையவனுக்கு எப்படி முதலில் கல்யாணம் ஆகும்! அதைக் கவனிக்காமல் பேசுகிறாயே!" என்று குறையுடன் கூறினாள்.

"என்ன ஜானகி! தெரிந்து பேசுகிறாயா! தெரியாமல் பேசுகிறாயா! மூத்தவனுக்கு ஆன பின்தான் இளையவனுக்கு ஆகவேண்டுமென்றால் செல்வராஜன், பிள்ளையாருக்குப் போட்டியாகக் காளியாக இருக்கும் அரசமர மேடைக்கு மனுப் போட வேண்டியதுதான்! நன்றாயிருக்கிறது நீ சொல்வது! நொண்டிப் பையனுக்கு முதலில் யார்தான் பெண் கொடுப்பார்கள்!" என்றார் சற்று ஏளனமாக.

ஜானகியின் உள்ளம் இந்த வார்த்தைகளினால் துடிதுடித்தது.

"அதென்னமோ அண்ணா, நீ என்னவேண்டுமானாலும் சொல்லிக் கொள்! நொண்டியானாலும் அவன் என் பிள்ளை! அவனுக்கு ஒரு குறைவு வரும்படி யார் பேசினாலும் செய்தாலும் நான் சகித்துக்கொண்டிருக்க மாட்டேன்! அவனுக்குப் பிறகுதான் எனக்கு மற்றவர்கள் எல்லாம்!" என்றாள் வருத்தத்துடன்.

நீலகண்டம் அவள் வார்த்தையைப் பொருட்படுத்தாமலே, "உம்! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன், ஜானகி! விமலாவைச் செல்வராஜனுக்குக் கொடுப்பதுதான் என் விருப்பம். நீ சம்மதித்தால் இந்த மாதமே முகூர்த்தம் வைத்து விடுகிறேன்..." என்றார்.

'நான் பணம் கொடுத்து உன் பிள்ளையை டாக்டருக்குப் படிக்க வைத்த நன்றியை மறந்து பேசுகிறாயே!' என்ற குற்றச்சாட்டு அவரது வார்த்தைகளில் நன்கு ஒலித்தது.

"என்ன அண்ணா நான் இப்பொழுது சொல்லி விட்டேன்! விமலாவைச் செல்வராஜனுக்குக் கொடுக்கக் கூடாது என்றேனா! முதலில் ஜெயராமனுக்கு எப்படியாவது பார்த்து முடித்து விடுகிறேன். விமலாவுக்கு அப்படி என்ன வயதாகி விட்டது! இருவரும் தொழில் நடத்த ஆரம்பித்த பிறகு......"

ஜானகி வார்த்தையை முடிக்கவில்லை. கோபம் ஒரேயடியாகப் பொத்துக் கொண்டு வந்து விட்டது நீலகண்டத்துக்கு.

"போதும்! போதும்! உன் பிடிவாத சுபாவம் தெரிந்தும் நானுக வாயை எச்சிலாக்கிக் கொண்டேன். உன்னைச் சொல்லிக் குற்றமில்லை! என்னைத்தான் சொல்ல வேண்டும்!" என்றவாறே ஆத்திரத்துடன் ஊஞ்சலை விட்டு எழுந்தார். உடனே, "நான் வருகிறேன், ஜானகி! இரண்டு மணி வண்டிக்கே அவசரமாகப் போக வேண்டும்" என்று படபடப்பாகக் கூறிவிட்டு அங்கவஸ்திரத்தை எடுத்துப் போட்டுக் கொண்டு கிளம்பினார்.

"அண்ணா! நீ இப்படிக் கோபித்துக் கொண்டு போகிறது சுத்தமாக நன்றாயில்லை" என்று ஜானகி எவ்வளவோ கெஞ்சியும் அவர் காது கொடுத்துக் கேட்கவேயில்லை. 'சரக்-சரக்-சரக்' என்று செருப்புச் சத்தம் கோபத்தை உணர்த்திக் காட்ட, வெகு வேகமாக அவர் வெளியேறி விட்டார்.

நிலை வாயிற்படியில் தலையைச் சாய்த்தபடி ஸ்தம்பமாக நின்று விட்டாள் ஜானகி.

"அம்மா" என்ற குரல் கேட்டுத் திரும்பினாள் ஜானகி. கையில் ஊன்றுகோலுடன் அவள் பின்னால் நின்றுகொண்டிருந்தான் ஜெயராமன்.

"அம்மா! மாமா சொன்னதை யெல்லாம் நானும் கேட்டுக் கொண்டுதானிருந்தேன். அவர் சொன்னதுதான் நியாயம். இந்த நொண்டிக்கு யாரம்மா பெண் கொடுக்கப் போகிறார்கள்! எனக்காக நீ கவலைப்படுவதை ஒழித்து விட்டுத் தம்பியின் நலனைக் கவனியம்மா. அப்படியே எனக்கு ஒருவர் பெண் கொடுக்க முன் வந்தாலும் நான் கல்யாணம் செய்து கொண்டு அந்தப் பெண்ணின் வாழ்வையும் வீணாக்க மாட்டேன்! தம்பியின்



கல்யாணத்துக்கு இடையூறாகவும் இருக்க மாட்டேன். நான் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை, அம்மா!" என்று உறுதியான குரலில் மொழிந்தவாறே அன்னையின் கண்ணீரை அன்போடு துடைத்தான் ஜெயராமன். பேச்சிழந்து நின்றாள் ஜானகி.

அன்று மாலை, விமலா வீட்டுக்கு வந்ததுமே அங்கே என்னமோ மனத்துக்கு ஒவ்வாத காரியம் நடைபெற்றிருக்கிறதென்பதை ஒரு கணத்தில் ஊகித்துக்கொண்டு விட்டாள். நேரே அத்தையிடம் வந்து, "அத்தை! என்ன விஷயம்! உங்கள் முகம் ஏன் வாடியிருக்கிறது! அப்பாவையும் காணோமே! என்ன அத்தை!" என்று அத்தையின் கைகளைப் பிடித்துக்கொண்டு மிகவும் பரிவுடன் கேட்டாள்.



ஜானகி அவளுக்கு ஒன்றுமே பதில் கூறவில்லை. அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அதற்குள் விமலாவின் அருகில் வந்த ஜெயராமன், "விமலா! அம்மாவுக்கு ஒன்றுமே சொல்ல வாய் இல்லை. எல்லாவற்றுக்கும் காரணம் நானே" என்று ஆரம்பித்து அன்று மத்தியானம் அம்மாவுக்கும் மாமாவுக்கும் நடந்த விவகாரங்களை யெல்லாம் ஒன்றுகூடப் பாக்கி விடாமல் கூறி முடித்தான்.

அதைக் கேட்டு மனம் வருந்திய விமலா, "என்ன அத்தை! அப்பா கோபித்துக் கொண்டு போனதற்காகவா வருந்துகிறீர்கள்! நீங்கள் கவலைப்பட வேண்டாம்! அப்பா என்னதான் கோபித்துக் கொண்டாலும் என் இஷ்டத்துக்கு விரோதமாக ஒருநாளும் நடக்க மாட்டார். எனக்கும் வயதாகி விட்டது. என் வாழ்வின் தரத்தை நிர்ணயப்படுத்திக் கொள்ளும் அறிவும் வந்து விட்டது. அப்பாவுக்கு நானே ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். அதைத் தபாலில் சேர்த்து விடுங்கள்!" என்று ஆணித்தரமான குரலில் கூறிவிட்டு விமலா தன் அறைக்குச் சென்றாள். உடனேயே ஒரு கடிதம் எழுதிக் கொண்டு வந்து அத்தையிடம் கொடுத்து, "அத்தை! இதைப் படித்துப் பாருங்கள்!" என்றாள்.

"அன்புமிக்க அப்பாவுக்கு, அனேகம் வணக்கத்துடன் எழுதிக் கொள்ளும் விண்ணப்பம். இங்கே நடந்தவைகளை யெல்லாம் அறிந்து கொண்டேன். என்னை டாக்டருக்குப் படிக்க வைக்குமுன் தாங்கள் 'விமலா! அன்பு என்பதின் மறு பொருளே டாக்டர் என்பது. சேவை செய்வதே, ஒரு டாக்டரின் உன்னத லட்சியம். சுய விருப்பு வெறுப்பல்ல!' என்று சொல்லி என்னை ஆசீர்வதித்தே முதன் முதலில் வைத்தியக் கல்லூரியில் கொண்டு சேர்த்தீர்கள். உங்கள் ஆசீர்வாதம் பலிக்கப்போகிறது. அன்பு செய்வதே இனி என் கடமை. சின்ன அத்தானிடம் அறிவோடு அழகும் ஆடம்பரமும் வேண்டிய அளவு இருக்கின்றன. அவருக்கு எவரும் பெண் கொடுக்க முன் வருவார்கள். பெரிய அத்தானின் அறிவும் அழகும் கம்பீரமும் குறைப்பட்ட அவரது நிலைக்குள் அடங்கி விட்டது. அதை நினைக்கும் பொழுது என் நெஞ்சு வெடித்து விடுகிறது.

எனக்குச் சில வருஷங்களுக்கு முன்பு ஏற்பட்ட கடுமையான ஜுரத்தின்பொழுது...... அர்த்த ராத்திரியில் எனக்காக அவசரமாகச் சைக்கிளில் போய் டாக்டரை அழைத்து வரும் வழியிலல்லவா அத்தானுக்கு அந்தப் பயங்கர நிலை ஏற்பட்டது! அதை அடியோடு மறந்து விட்டீர்களா, அப்பா!

நான் பெரிய அத்தானையே கல்யாணம் செய்துகொண்டு அவருக்குப் பணிவிடை செய்யத் தீர்மானித்து விட்டேன். என் ஒருத்தியால்தான் அவரை அவ்வாறு கவனித்துக் கொள்ள முடியும். இதுவே என் முடிவு.

உங்கள் அன்புள்ள
விமலா."

"விமலா! உனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது! உன்னை நம்பிக் கொண்டிருக்கும் செல்வராஜனின் கதி என்ன ஆவது!" என்று கத்தி விட்டாள் ஜானகி.

"பைத்தியம்தான் அத்தை! அன்புப் பைத்தியம்! சின்ன அத்தான் என்னை விரும்புவதை நான் அறிவேன். அவரைவிட எனக்குப் பெரிய அத்தானின் பரிசுத்தமான அன்புதான் பெரிது. என் உயிருள்ளளவும் அவருக்குச் சேவை செய்வதே என் கடமை. உங்கள் குழந்தையைக் கடமையினின்றும் வழுவச் சொல்கிறீர்களா, அத்தை!" என்று கேட்டு, நீர் மல்கும் கண்களுடன் அத்தையைப் பார்த்தாள் விமலா.

"விமலா!" என்று ஏககாலத்தில் வெவ்வேறு உணர்ச்சி வசப்பட்டவர்களாகக் கத்தினர், செல்வராஜனும் ஜெயராமனும். ஜெயராமனின் கண்களில் அன்புக் கண்ணீர் பனித்தது.

"என் செல்வமே!" என்று மனம் கனிந்தபடியே கண்களில் நீர் ததும்ப விமலாவை இறுகத் தழுவிக் கொண்டாள் ஜானகி.




கே. எஸ். ஜெயலக்ஷ்மி

வெளியுலகம், நிலவின் ஒளி காணாமல் இருளில் ஆழ்ந்து கிடந்தது போன்று, என் உள்ளமும் தெளிவு பெறாமல் குழம்பிக் கொண்டிருந்தது. கூழோ கஞ்சியோ குடித்துத் தங்கள் வறுமையை என்னிடம் கூறாமல் மறைத்து, என்னை பி. ஏ. வரையில் படிக்க வைத்தனர் என் பெற்றவர்கள். அத்துடன் அவர்கள் கடமை தீர்ந்து விட்டது. ஆனால் என் கடமையைச் செய்ய எனக்கு இன்னும் ஒரு வழியும் பிறக்கவில்லை. என்ன செய்வேன்? வேலை பூதத்தின் வாயினின்று வெளியே வர ஒரு மார்க்கமும் புலப்படவில்லையே?

இவ்வாறு சிந்தனையிலே மூழ்கியிருந்த என்னைச் சுவரிலிருந்த கடிகாரம் ஒன்பது முறை அடித்து எழுப்பியது. "அடேடே! மணி ஒன்பதாகி விட்டதே! சாப்பிடப் போக வேண்டியதுதான். பின் வேலையற்றவன் என்னதான் செய்வது? உண்டு பின் உறங்குவதும், உறங்கிப் பின் உண்பதும் தானே அவனது வேலைகள்!" என்று எண்ணியவாறே எழுந்த என்னை, எங்கிருந்தோ எழுந்த பெரும் கேலிச் சிரிப்பொலி தடுத்து நிறுத்தியது. நண்பர்கள் யாரேனும் வந்து விட்டனரோ என்றெண்ணி, அறையை ஒரு நோட்டம் விட்டேன். ஒருவரையும் காணவில்லை. வெறும் மனப்பிரமையாயிருக்குமென்றுஎன்னையே திடப்படுத்திக் கொண்டு, பின்னுமொரு முறை ஆசனத்தினின்று எழுந்தேன்.

"ஹா ஹா ஹா!" என்று மறுபடியும் பலமாகச் சிரிக்கும் சப்தமும், அதைத் தொடர்ந்து, "உன்னைப் போலல்லாது, எத்தனை மனத் துயரம் இருப்பினும், கடமையை மறவாது செய்து வருகின்றேனே, என்னைத் தெரியவில்லையா?" என்று கேட்கும் சப்தமும் என்னை ஆச்சரியத்துக்குள்ளாக்கவே சுவரிலிருந்த கடிகாரத்தை நிமிர்ந்து நோக்கினேன். "நீ உன் கடமையைச் செய். காலன் வாயில் சென்றுவிட்ட ராகவனை பிழைத்தெழுந்து விட்டபொழுது உனக்குக் கதி மோட்சம் இல்லாமல் இருக்குமா?" என்று கேட்ட கடிகாரம் கதையைத் தொடர்ந்தது:

என்னை முதன் முதலில் உருவாக்கியவன் சேகர்தான். பல நாள் சிரமப்பட்டுப் புதுமையானமுறையில் அமைத்த என்னைத் தன் உயிரினும் அனைய நண்பன் ராகவனது திருமணத்தின்போது பரிசாக அளித்தான். நானும் மகிழ்வுடன், அவர்கள் இன்ப வாழ்வைக் காண ஆவல் கொண்டு, என் அழகை அவர்களிடம் காட்டினேன். நல்லவேளை! நடுக் கூடத்திலேயே என்னைப் பாதுகாப்புடன் பொருத்தி விட்டார்கள்.

காதலித்து மணம் புரிந்து கொண்ட அவர்களைக் கண்காணிக்கப் பெரியோர்கள் இல்லாமற் போகவே, அந்தப் பொறுப்பை நானே மனமுவந்து ஏற்றுக் கொண்டேன். அவர்கள் இருவருக்கும் சிறிதளவு மனத் தாங்கல் ஏற்பட்டாலும், நான் தான் தீர்த்து வைப்பேன். "மணியைப் பாருங்கள், எட்டு அடித்து விட்டது. சாப்பிட வேண்டாமா?" என்று அழைப்பதன் மூலம், தன் கோபம் தணிந்து விட்டதை அறிவிப்பாள் ராஜம். ராகவனும் எழுந்து செல்லுவான். நானும் மகிழ்ச்சியால் அசைந்தாடுவேன். உம், இப்படியே அவர்கள் வாழ்வு சென்றிருந்தால், நான் ஏன் உனக்கு இதைச் சொல்லப் போகிறேன்?" என்று கூறி நிறுத்தியது கடிகாரம்.

ஏது? மிக சுவாரஸ்யமான கட்டத்தில் வந்து 'தொடரும்' போடுகின்ற ஆசிரியரைப் போல, கேள்விக் குறியுடன் நிறுத்தி விட்டதே என்று கவலையுற்ற என்னைக் காக்க வைக்காது தொடர்ந்தது.

"எல்லாவற்றிலும் சிறந்தது கல்விச் செல்வம்" என்ற முதுமொழியின்படி, தான் கற்றதை மற்றவரும் படித்தறிய உதவி புரிகின்ற உபாத்தியாயர் தொழில் தான் ராகவனுடையது. அவன் வகுப்-



பென்றால் மாணவர்கள் மிகவும் அமைதியுடனும், உற்சாகத்துடனும், திறந்த வாய் மூடாது அமர்ந்திருப்பார்கள். ஒவ்வொரு சிறு சொல்லுக்கும், சிறந்த விளக்கத்துடன், அவன் கூறும் பொருளுரைகள், தமிழ் கற்கும் மாணவர்களிடையே மிகுந்த ஆச்சரியத்தைத் தோற்றுவிக்கும். தமிழ் என்றதும் அவன் உள்ளத்திலே புது உணர்ச்சி உண்டாகும். உணர்ச்சியினால் உந்தப்பட்டுத் தொண்டை கிழியக் கத்துவான். யாரேனும் ஒருவன் சிறிது பிசகு செய்து விட்டால், அது தன் உயிருக்கு நேர்ந்த ஊறு போல் கருதுவான், வருந்துவான்; அவனைத் திருத்தும்வரை தூங்கவே மாட்டான். ராஜமும், மற்ற சக உபாத்தியாயர்களும் எவ்வளவோ எடுத்துக் கூறியும் கேட்கவில்லை அவன்.

ஆகவே, இது எதில் கொண்டு வந்து விடுமென்று கருதினார்களோ, அதிலேயே சென்று முடிந்தது. கத்திக் கத்திப் பேசிய தன் காரணமாக, சாதாரண இருமலாகத் தொடங்கிய வியாதி முற்றி க்ஷய ரோகத்தில் கொண்டு விட்டது. ராஜம் தன் மேனியிலிருந்து, இருக்க ஒன்றிரண்டு ஆபரணங்களையும் கழற்றி வைத்தியம் பார்த்தாள். அதற்கு மசிந்து விடுமா அந்த ராஜ வியாதி? நண்பர்களும் ஏதோ உதவிகள் செய்தனர். இளமையின் பூரிப்பிலே, மகிழ்ந்து இருக்க வேண்டிய அத் தம்பதிகள் வறுமையிலும் வியாதியின் கொடுமையிலும் உழன்றதைக் காணும் எனக்கு, கண்களைப் பொத்திக் கொள்ளலாம் போலிருக்கும். என் செய்வது? விதியின் கொடுமையை யாரால் வெல்ல இயலும்! "மணிக் கெடு வைத்து. அது வரை பிழைத்திருந்தால் பார்க்கலாம்" என்று கைவிட்ட சந்தர்ப்பங்கள் எத்தனையோ? அப்பொழுதெல்லாம் தப்பித்து வந்த அவன் உயிரின் சக்தியை நினைத்தால் எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது.

ஒரு தடவை அப்படித்தான்—அரைமணி நேரம் இருமித் தீர்த்து, தன் நிலையில்லாமல் சுருண்டு விழுந்தான் ராகவன். எப்பொழுதும் நடக்க வேண்டிய முதற் சிகிச்சைகள் நடந்தேறின. டாக்டர் கோபால், "இன்று இரவு ஒன்பது மணி வரை உயிர் இருந்தால் பின் ஒரு அபாயமுமில்லை" என்று தம் கடமையைக் கூறி விட்டுச் சென்று விட்டார். ராஜமோ, என்னைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். என் இரு கைகளையும் தாவிப் பிடித்து, ஒன்பதை அடைந்தேன். அதை 'கிணிங், கிணிங்' ஒலியாலும், அவளுக்குத் தெரிவித்தேன். ராஜமோ, கண் கொட்டாமல் கணவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். மரக்கட்டைபோல் கிடந்த அவன் உடல் ஒரு முறை சிலிர்த்தது. கண்கள் இரண்டும் தாமே திறந்து கொண்டன. நித்திரையினின்றும் ஆவேசத்தால் விழித்தெழுந்தவன்போல் பாய்ந்தெழுந்த அவன், திடமான குரலில் பேசவே ஆரம்பித்து விட்டான். "ராஜம், நான் இனி சாகவே மாட்டேன். தூக்கத்தில் யாரோ இருவர், தலையில் கொம்புடன் வந்தனர். என்னைக் கயிற்றால் கட்டி இழுத்தனர். திடீரென மற்றொருவன் தோன்றி, 'இவனல்லடா, எதிர் வீட்டுக்குள் நுழைவதற்குப் பதில் இங்கே வந்து விட்டீர்களே, முட்டாள்களா! வாருங்கள், அவனுக்கு நாளைக்குக் கெடு' என்று சொல்லி அவர்களை இழுத்துக் கொண்டு போனான். அதனால் நான்..." என்று கூறி நிறுத்தினான்.

இந்த அதிசயத்தைக் கேட்ட நான், திக்பிரமை யடைந்து நின்றே விட்டேன். போ! மறுநாள் முதல், அவன் உடல் நிலை ஆச்சரியப்படத் தக்க முறையில் அபிவிருத்தி யடைந்தது. ஆனால், மறு நாள் எப்பொழுதும் போல ஆபீசுக்குச் சென்ற எதிர் வீட்டு ரகுராமய்யர் மோட்டார் விபத்தில் இறந்து விட்டார். மற்றவர்களுக் கெல்லாம் இது மிகவும் வியப்பாக இருந்தது.

கடிகாரம் இவ்வாறு கதையைக் கூறி முடித்தது. அப்பொழுதுதான், அலங்காரப் பொருளாக இருந்த அந்த ஓட்டைக் கடிகாரத்தை, விலை கொடுத்து வாங்கி வந்து ரிப்பேர் செய்ததாகத் தந்தை சொன்னது என் ஞாபகத்துக்கு வந்தது. 'நல்ல கதை' என்று எழுந்து சாப்பிடச் சென்றேன்.



## பிரபல திருமணம்

திருச்சி ஜில்லா, குளித்தலை மிராசுதார் திரு எஸ். மருதநாயகம் பிள்ளை அவர்களின் புதல்வரும், திருச்சி கவர்ன்மெண்ட் ஹெட் குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரி சிவில் அஸிஸ்டெண்ட் சர்ஜனுமான டாக்டர் எம். லிங்கம், எம். பி., பி. எஸ்.க்கும் ராஜ்சாஹிப் திரு ஏ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் பௌத்திரியும், ஜோலார்பேட்டை ரைல்வே அஸிஸ்டெண்ட் என்ஜினியர் திரு ஏ. ராமசாமி பிள்ளை அவர்களின் புதல்வியுமான திருமதி சரோஜாவுக்கும் கோவை ஆர். எஸ். புரத்தில் 7-7-55 அன்று மிகச் சிறப்பாகத் திருமணம் நிறைவேறியது.

வாழ்க, மணமக்கள்!

பரிபூர்ண
மாக நம்புவ
தற்க்கும்...

கவர்ச்சிகர
மானஅமை
ப்புக்கும்...

உட்பூச்சுக்கு
ம்,வெளிப்பூச்
சுக்கும்...



நேர்த்தியான
வர்ணவேலைக
ளுக்கும்...

அதைப்பற்றி சந்தே
கமே இல்லை...அதுதா
ன் எல்லோரும் விரும்
பும் நேர்த்தியான ஸிந்
தடிக் எனமல்...



**ஷாலிமார்**
**ஸூபர்லாக்**

**ஸிந்தடிக்**
**எனமல்**

ப்ரஷ்ஷினால் பூசலாம், தோய்த்துபூசலாம், அல்லது ஸ்பிரே பண்ணலாம். பல நடவைகள் கழுவுவதற்கு ஏற்றது. 38 வித பளபளப்பான கலர்களில் கிடைக்கின்றது.

SPW 233

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.**
POST BOX 136, MADRAS 1

# பர்மா ரமணி

பாப்பா மலர் தொடர்கதை

அழ. வள்ளியப்பா

## 5. நம்ப முடியுமா ?

மறு நாள் காலை நேரம். மதுர நாயகத்தின் வீட்டுக் கடிகாரம், 'டாண், டாண்' என்று ஏழு தடவைகள் அடித்து முடித்தது. அதே சமயம், "சார்! சார்!" என்ற குரலும் கேட்டது.

அறையில் உட்கார்ந்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்த மதுரநாயகம் சத்தம் கேட்டதும் வெளியே வந்தார். வாசல் பக்கம் பார்த்தார். உடனே, "ஓ, நீயா? வா, வா! உள்ளே வா" என்று அன்புடன் அழைத்தார்.

வாசலில் நின்று கொண்டிருந்த ரிக்ஷாக்காரப் பையன் ரமணி அறைக்குள்ளே வந்தான். மதுரநாயகம் தம்முடைய நாற்காலியில் உட்கார்ந்தார். "நீயும் இப்படி உட்கார்" என்று கூறி எதிரிலிருந்த நாற்காலியை அவனுக்குச் சுட்டிக் காட்டினார்.

"பரவாயில்லை, சார்!" என்று கூறி விட்டு நின்று கொண்டிருந்தான் ரமணி.

"சும்மா உட்கார்ந்து பேசு" என்று சொன்னார் மதுரநாயகம். ரமணி தயக்கத்துடன் அவர் சுட்டிக் காட்டிய நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

"ரமணி, உன்னிடம் ஒன்று கேட்க வேண்டுமென்று நினைத்தேன். நேற்று போலீஸ் ஸ்டேஷனில் நீ ஒன்றிரண்டு இடங்களில் வேலைக்கு இருந்ததாகவும், அங்கெல்லாம் அதிக நாட்கள் இருக்க முடியவில்லை என்றும் சொன்னாயே. ஏன் அப்படி? என்ன காரணம்?" என்று கேட்டார் மதுரநாயகம்.

"இதே கேள்வியை அந்த இன்ஸ்பெக்டர் கேட்டாலும் கேட்பார் என்றுதான் நினைத்தேன். ஆனால், அவர் கேட்கவில்லை. நீங்கள் கேட்டு விட்டீர்கள். இதோ சொல்லுகிறேன்; கேளுங்கள்" என்று கூறுவதற்கு ஆரம்பித்தான் :

"என் அப்பா இறந்ததும் நான் மதுரையிலே முதன் முதலாக ஒரு பணக்கார வீட்டிலே வேலைக்குச் சேர்ந்தேன். எடுபிடி வேலைதான். சாப்பாடு போட்டு இரண்டு ரூபாய் சம்பளம் தந்தார் அந்தப் பணக்காரர். அவர் கஞ்சக்கருமி. சவு இரக்கம் இல்லாதவர்.

"ஒரு நாள் காலை நேரம். ஒரு சிறுபெண் — வயது ஐந்து கூட இருக்காது. பிச்சை கேட்க அந்த வீட்டுக்கு வந்தாள். அப்போது எல்லோரும் பலகாரம் சாப்பிட்டு விட்டார்கள். நான் மட்டும்தான் சாப்பிட வேண்டும்.

"பிச்சைக்காரப் பெண், 'ஐயா சாமி, பிச்சை போடுங்கள். பசியாயிருக்கிறது' என்று கூறிக் கொண்டே கையிலிருந்த தட்டை நீட்டினாள். அவளைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பரிதாபமாயிருந்தது. ஆனால், அந்தப் பணக்காரருக்குக் கோபம்தான் வந்தது. 'சீ கழுதை! போ. பிச்சை வேண்டுமாம் பிச்சை! பிறக்கும்போதே பிச்சைப் பாத்திரத்தோடே பிறந்து விட்டது. போ, போ' என்று விரட்டினார்.

"அந்தப் பெண் போகவில்லை. 'ஐயா, உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. ஏதாவது கொடுங்க, ஐயா!' என்று கூறி அவரது காலைப் பிடித்துக்



கொண்டு கெஞ்சினாள். உடனே அவர் காலை வேகமாக உதறினார். அவள் கீழே விழுந்தாள். கையிலிருந்த தட்டும் தரையிலே உருண்டு ஓடியது. அந்தப் பரிதாபக் காட்சியைக் காண எனக்குச் சகிக்கவில்லை.

"சற்று நேரம் சென்று அந்தப் பெண் மெதுவாக எழுந்தாள். கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.

"ஐந்து நிமிஷம் சென்றது. பணக்காரர் என்னிடம் காலணாக் கொடுத்துப் பொடி வாங்கிவரச்சொன்னார்: வெளியே வந்ததும், அந்தச் சிறு பெண் எங்கே என்று தேடிப் பார்த்தேன். தெருக்கோடியில் களைத்துப் போய் அவள் உட்கார்ந்திருந்தாள். உடனே நான் அவளிடம் ஓடினேன். 'தங்கச்சி, நீ வருத்தப்படாதே! உன்னை ஒரு பணக்காரர் பிடித்துத் தள்ளினாரே, அவர் வீட்டில்தான் நான் இருக்கிறேன். உன்னைப் பார்க்க எனக்கு வருத்தமாயிருக்கிறது. நீ இப்போதே எழுந்து நேராக அந்த வீட்டுக் கொல்லைப்புறத்துக்குப் போ. நானும் ஒரு நொடியில் அங்கு வந்து விடுகிறேன். வந்ததும், உனக்கு நிச்சயம் ஏதாவது சாப்பிடுவதற்குத் தருவேன்' என்று கூறி அவளை அனுப்பி வைத்தேன்.



"சிறிது நேரத்தில் பொடியை வாங்கிக் கொண்டு போய்ப் பணக்காரரிடம் கொடுத்து விட்டு, சமையல்கட்டுக்குச் சென்றேன். எனக்காக இருந்த மூன்று இட்டிலிகளையும் ஒரு இலையில் வைத்தேன். அவற்றை எடுத்துக் கொண்டு கொல்லைப்புறத்துக்குச் சென்றேன். அங்கே தயாராகக் காத்துக் கொண்டிருந்த சிறுமியிடம் கொடுத்துச் சாப்பிடச் சொன்னேன். சிறுமி ஆசை ஆசையாக இட்டிலிகளைச் சாப்பிடுவதைக் கண்டு ஆனந்தம் அடைந்தேன்.

"இது நடந்து கால்மணி நேரம்கூட ஆகியிருக்காது. முதலாளி கூப்பிடுவதாகச் சமையல்காரன் வந்து என்னைக் கூப்பிட்டான். உடனே நான் அந்தப் பணக்காரரிடம் சென்றேன். 'டேய், நீ என்ன வேலை செய்தாய்? அயோக்கியப் பயலே! யாரோ ஒரு பிச்சைக்காரப் பெண்ணாம். அவளுக்கு நீ இட்டிலி கொடுத்தாயாமே! யாரைக் கேட்டுக் கொண்டுடா கொடுத்தாய்?' என்று கோபத்துடன் இரைந்தார்.

"சமையல்காரன்தான் கோள்சொல்லியிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன். 'ஐயோ! நான் ஒன்றும் திருடிக் கொடுக்கவில்லையே! எனக்காகத் தந்த இட்டிலிகளைத்தானே அவளுக்குக் கொடுத்து விட்டு நான் பட்டினி கிடக்கிறேன்!' என்றேன்.

"என் பேச்சைக் கேட்டதும் அவரது கோபம் அதிகமாகி விட்டது. 'டேய், யாரை ஏமாற்றப் பார்க்கிறாய்? உனக்குத் தந்த இட்டிலிகளைத் தானம் செய்து விட்டு நீ இப்போது பட்டினி கிடப்பதாகச் சொல்லுகிறாய். வாஸ்தவம் தான். ஆனால், மத்தியானம் சாப்பிடும் போது இந்த வேளைக்கும் சேர்த்தல்லவா மூக்குப் பிடிக்கச் சாப்பிடப் போகிறாய்? அப்போது யாருக்கு நஷ்டம்? எனக்குத் தானேடா? இதே போல் எத்தனை தடவைகள் செய்திருக்கிறாயோ? திருட்டுக் கழுதை' என்று என்னைத் திட்டினார். அவர் என்னைத் 'திருடன்' என்று சொன்னது எனக்கு மிகவும் வேதனையாயிருந்தது. பேசாமல், அன்றே—அந்த நிமிஷமே அவர் வீட்டை விட்டு வெளியேறி விட்டேன்.

"பிறகு, நான் எங்கெங்கோ வேலைக்கு அலைந்தேன். கடைசியாக ஒரு பலசரக்கு மண்டியில் வேலை கிடைத்தது. அந்த முதலாளியிடம் ஒரு கணக்குப் பிள்ளை இருந்தார். அவர் இருபது வருஷ காலமாக அவரிடம் வேலை பார்த்து வந்தார். அன்று ஒரு நாள் கணக்குப் பிள்ளையின் பெயருக்கு ஒரு அவசரத் தந்தி வந்தது. அப்போது அவர் கடையில் இல்லை. பாங்கியிலே பணம் கட்டப் போயிருந்தார். முதலாளியே கையெழுத்துப் போட்டுத் தந்தியை வாங்கினார். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. அதனால், தந்திச் சேவகரிடமே அதைக் கொடுத்துப்படித்துக்காட்டச் சொன்னார்.

"தந்திச் சேவகர் அதைப் படித்துப் பார்த்து விட்டு, 'த்சொ, த்சொ! பாவம்! உங்கள் கணக்குப் பிள்ளையின் தாயார் இறந்து விட்டார்களாம். 'உடனே புறப்பட்டு வரவும்' என்று இருக்கிறது' என்றார். 'சரிதான்' என்று கூறித் தந்தியை வாங்கிப் பெட்டிக்குள்ளே வைத்தார் முதலாளி.

"தந்திச் சேவகர் போனதும் என்னை அவர் அருகிலே அழைத்தார். அப்போது நானும் அவரும்தான் இருந்தோம். 'டேய், ரமணி! இந்தத் தந்தி வந்த விஷயத்தைக் கணக்குப் பிள்ளை

# சிறுவர்கள் சித்திரப்போட்டி




5 ரூபாய் பரிசு பெற்றவர்கள்: 1. ரங்கநாதன், வயது 5, சின்ன சேலம், தென் ஆர்க்காடு ஜில்லா. 2. ஜி. கே. சரோஜா, வயது 11, மயிலாப்பூர், சென்னை. 3. வி. ராஜு, வயது 8, சிறுகிழக்நல்லூர், குமராக்ஷி போஸ்ட்.

யிடம் சொல்லவே சொல்லாதே! எழுத வேண்டிய கணக்குகளெல்லாம் ஏராளமாக இருக்கின்றன. கணக்குப் பிள்ளை இன்றைக்கே ஊருக்குப் போய் விட்டால், திரும்பி வரப் பத்துப் பதினைந்து நாட்களாகும். மூன்று நாளிலே கணக்குகளை யெல்லாம் எழுதி முடித்து விடுவான். அப்புறம் சொல்லலாம்' என்றார்.

"இதைக் கேட்டதும் நான் திடுக்கிட்டேன். 'என்ன இது! உங்களிடம் இருபது வருஷமாக வேலை பார்த்து வருகிறார் அந்தக் கணக்குப் பிள்ளை. அவரைப் பெற்று வளர்த்த தாயார் இறந்து விட்டதாகத் தந்தி வந்திருக்கிறது. இறக்கும் சமயத்தில்தான் அவர் அம்மாவின் அருகிலே இல்லை. இறந்த பிறகாவது அம்மாவின் முகத்தைப் பார்க்க வேண்டாமா? உங்கள் வேலை தான் பெரிது என்கிறீர்களே!' என்று ஆத்திரத்துடன் கேட்டு விட்டேன்.

"நான் கூறியதைக் கேட்டு அவர் கோபம் கொண்டார். 'டேய், அதிகப் பிரசங்கி! நீ அவனிடம் இதைப் பற்றி ஏதாவது சொன்னால் உடனே உன்னை வேலையை விட்டே விரட்டி விடுவேன்' என்று மிரட்டினார்.

"உடனே நான் அவரிடம், 'சிரமப் பட்டு நீங்கள் விரட்ட வேண்டாம். நானே போய் விடுகிறேன். ஆனாலும், உடனே பாங்குக்குப் போய்க் கணக்குப் பிள்ளையிடம் விஷயத்தைச் சொல்லி விட்டுத்தான் மறுவேலை பார்க்கப் போகிறேன்' என்று கூறிப் புறப்பட்டேன்.

"நேராக பாங்கிற்குப் போனேன். கணக்குப் பிள்ளையிடம் அந்தத் துக்கச் செய்தியைக் கூறி விட்டு, அந்த ஊரை விட்டே புறப்பட்டேன். நேராக இந்தப் பட்டணத்துக்குத்தான் வந்தேன்."

இவ்வளவு நேரமாக ரமணி கூறியதைக் கேட்டதும், மதுரநாயகத்துக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. 'ஒரு சிறு பையன். இவனுக்கு எவ்வளவு பரோபகார சிந்தனை!' என்று வியந்தார்.

பிறகு புன் சிரிப்புடன், "ரமணி, நீ சொல்வதெல்லாம் சரிதான். இருந்தாலும், காலத்தை ஒட்டி, நமது நிலைமையை அனுசரித்துப் போக வேண்டியதுதான்... ஆமாம், நீ சொல்வதைப் பார்த்தால் உனக்கு ஒருவரின் கீழேயிருந்து வேலை பார்க்கப் பிடிக்காது போலிருக்கிறதே!" என்று கேட்டார் மதுரநாயகம். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## மானங் காத்த மருதுபாண்டியர்

“சுதந்திர மரம் முளை விட்டு வளரு வதற்கு நாட்டின் விடுதலைக்காகப் போரிடும் வீரனின் உதிரமே வித்தாகும்” என்று தாமஸ் காம்பெல் என்ற ஆங்கில தேச விடுதலை வீரர் களுக்குக் கூறினாராம். இந்தியாவின், இன்பத் தமிழகத்தின் விடுதலைக்காகத் தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தும் துறந்து, தங்கள் இரத்த வெள்ளத்தால் தமிழ் மண்ணைப் புனித மூறச் செய்த இரு பெரும் வீரர்களின் வீர வாழ்க்கையை விவரிப்பதே இந்நூல்.

பாரத நாட்டின் சுதந்திரத்தைச் சூறை யாட வந்த வெள்ளையர்களுக்கெதிராக முதல் முழக்கம் செய்தவன் வீரபாண்டிய கட்ட பொம்மன். அவனைப் பின்பற்றிச் சிவகங்கைச் சீமையின் இரு கண்களாகத் திகழ்ந்த பெரிய மருது, சின்ன மருது என்ற இரு சகோதரர்கள் வெள்ளையர்களைத் தமிழ் மண்ணில் வேரூன்ற விடாமல் தடுக்கக் கடும்போர் புரிந்தனர். சிவ கங்கையிலே அவர்கள் ஆங்கிலக் கம்பெனிப் பட்டாளத்துக்குச் சிம்ம சொப்பனமாக விளங் கினர். அவர்கள் பெயரைக் கேட்டாலே ஆங்கிலப் படையினருக்குக் குலைநடுக்கம் ஏற் பட்டது. ஆனால் சிவகங்கைச் சீமையிலுள்ள மக்களுக்கோ,

“சாந்துப் பொட்டு தளதளங்க
சந்தனப் பொட்டு கமகமங்க
மருதைக் கோபுரம் தெரியக்கட்டின
மருது வாரதைப் பாருங்கடி”

என்று மகிழ்ச்சியுடன் பாடுமளவுக்கு அன் புடன் இனிமையாகக் காட்சியளித்தனர். மருது பாண்டியருடைய சமஸ்தானத்தில் இருபத்தொரு தமிழ் வித்வான்களிருந்தார்கள் என்பதே அவர்களுடைய தமிழ் பக்திக்குத் தக்க சான்றாகும்.

தமிழ் பக்தி மிக்க மருது பாண்டியர்கள் 1801-ம் ஆண்டில் காளையார்கோவிலிலும், திருப்பாச் சேத்தியிலும் நிகழ்த்திய போர்கள் தமிழ் நாட்டின் சரித்திரத்தில் பொன் எழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய நிகழ்ச்சிகளாகும். அன்னியரின் கையில் சிக்கி அலங்கோல மாவதைவிடத் தங்கள் கையாலேயே அருமைத் தலைநகரான சிறுவயலைத் தன்மான உணர்ச்சி யின் காரணமாகத் தீயிட்டதைப் படிக்கும் பொழுது ஒவ்வொரு தமிழ் உள்ளமும் துடி துடிக்கத்தான் செய்யும். கடைசியாக, மருது பாண்டியர்கள் தலைமையில், காளையார் கோவி லில் தமிழ் மறவர்கள் புரிந்த வீரப் போரைக் குறித்து விரோதிகளே வியந்து போய்ப் பாராட்டியிருக்கின்றனர்.

மானங்காத்த மருது பாண்டியர்களின் வீர வாழ்க்கையை வெகு அற்புதமாக ஆராய்ச்சி யுடன் எழுதியிருக்கிறார் திரு க. சஞ்சீவி எம்.ஏ., அவர்கள். இவரது நடை நல்ல தெளிவும் வேகமும் கொண்டது. உணர்ச்சியும் உத்வேக மும் போட்டி போட்டுக் கொண்டு இவரது நடைக்கு அழகு தருகின்றன. ஆராய்ச்சியோடு தரும் விளக்கங்கள் உண்மைக்கு அழுத்தம் கொடுத்து விடுகின்றன. உணர்ச்சியும், ஆராய்ச் சியும் மிக்க இவ்வரிய நூலை எழுதிய திரு க. சஞ்சீவி அவர்கள் சென்னை சர்வகலாசாலை ஆராய்ச்சித் துறையில் பணியாற்றி வருகிறது, சர்வகலாசாலையின் ஆராய்ச்சித் துறைக்கே கௌரவமாகும்.

அமெரிக்காவிலும் ரஷ்யாவிலும் சுதந்திரப் போரில் வீர மரணம் எய்திய வீரர்களுக்கு ஞாபகச் சின்னங்கள் எழுப்பி யிருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறோம். இந்தியாவின் சுதந் திரப் போரில் அமரத்துவம் பெற்ற, தமிழ் நாட் டின் மானங்காத்த மருது பாண்டியர்களுக்கு இந்நூலே வெற்றிச் சின்னமாக, ஞாபகச் சின்னமாக விளங்கும் என்று சொன்னால் அது சிறிதும் மிகையாகாது.

சோர்ந்து போகும் நிலையில் உள்ள தமிழனைத் தட்டி யெழுப்பி உணர்ச்சியூட்ட இத்தகைய சுதந்திர வீரர்களின் வரலாறுகள் மிக்க பயன் தரும். இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் இன் னும் பல எழுத திரு க. சஞ்சீவி அவர்கள் முன் வர வேண்டும்.

நூல்: மானங்காத்த மருது பாண்டியர்; (இரண்டாம் பதிப்பு) ஆசிரியர்: திரு க. சஞ்சீவி, எம். ஏ. வெளியிட்டோர்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை - 1 (மாணவர் பதிப்பு) விலை ரூ. 1. —பி. எஸ். மணி

## பம்பாய் நாடக விழா மலர்

சேவைப் பணியிலும், பொதுநல ஊழியத்தி லும், தமிழ் வளர்ச்சியிலும் குன்றாத ஆர்வத் துடன் சிறந்த முறையில் தொண்டாற்றி வரு வது பம்பாய்த் தமிழ்ச் சங்கம். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழின் வளர்ச்சிக்கும் மேற்படி சங்கம் கருவூலமாக விளங்கிவருகிறது.

தமிழ் இலக்கிய வகுப்புகள் நடத்தியும், இசை நிகழ்ச்சிகள் நிகழ்த்தியும், இலக்கியச் சொற்பொழிவுகள் ஏற்படுத்தியும், சிறந்த கலைஞர்களைக் கொண்டு நாடகங்கள் பல நடிக் கச் செய்தும், தமிழகத்தின் தேசபக்தர்கள், தமிழ்ச் சான்றோர்கள் முதலியவர்களின் நினைவு நாட்கள் கொண்டாடியும் தூர தேசத்தில் வாழும் தமிழர்களுக்குப் பம்பாய்த் தமிழ்ச் சங்கம் அரிய முறையில் சேவை செய்து வரு கிறது. இதோடு நில்லாமல் ஆண்டுதோறும், கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாகக் கலை மணம் கமழ நாடக விழா மலரை வெளியிட் டுக் கலைக்கு ஏற்றம் அளிக்கிறார்கள்.

மேற்படி மலரில், நடிகர்கள், கலைஞர்கள், அறிஞர்கள் மற்றும் பிரபல பிரமுகர்கள் ஆகிய வர்கள் கட்டுரைகள் எழுதி மலருக்கு மணம் ஊட்டியிருக்கிறார்கள். கவர்ச்சியூட்டும் மேலட் டையிலிருந்து கடைசி வரையில் படிப்பவர் ஆர்வத்தைத் தூண்டும் முறையில் அமைந்து இம் மலர் மிகவும் அழகாக இருக்கிறது. கலைக் கும் மொழிக்கும் பம்பாய்த் தமிழ்ச் சங்கம் ஆற்றி வரும் அரும் தொண்டு, என்றும் நிலைத்து நிற்கும் அழியாத தொண்டு.

வெளியீடு: பம்பாய்த் தமிழ்ச் சங்கம், மாதுங்கா, பம்பாய் - 19. —‘விஜயம்’

# நிரூபணம்!




சாதாரணமான எளிய
பரீக்ஷைகளிலும் கூட

## புதிய
## 'ஆஸ்ப்ரோ'

வலி, ஜுரம் இவற்றினின்று
துரிதமாயும், அபாயமின்றியும் நிவாரணம் அளிக்கின்றது
என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது

**சிறந்தபாக்கிங்-நிறைந்தபாதுகாப்பு**

புதிய 'ஆஸ்ப்ரோ'வுடன் கூடிய காகிதத் துண்டை ஜலத்திலிட்டு, எவ்வளவு நேரம் வேண்டுமாயினும் வைத்திருங்கள். பிறகு அத்துண்டைப் பிரித்து வில்லைகளைப் பரிசோதியுங்கள் — அவைகள் கெடாமலும், சுத்தமாயும், ஈரமில்லாமலும் இருக்கக் காண்பீர்கள்.




ஒவ்வொரு புதிய 'ஆஸ்ப்ரோ'வும், காற்று மற்றும் ஈரம் படாமல் தனித்தனியே ஸீல் செய்யப்பட்டிருப்பதனால், உதிரி வில்லைகளால் ஏற்படும் வயிற்றைப் பாதிக்கும் அமிலங்கள் சேர்வதினின்றும் பாதுகாக்கிறது.

**துரிதமான வேலை - அதி சீக்கிர நிவாரணம்**

இரண்டு புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஒரு கிளாஸ் ஜலத்திலிடவும். அவை நொடியில் ஜலத்தில் கரைந்து மென்மையான தூளாய் விடுகின்றன. இச்சிறந்த செய்முறை வழிக்கு எமது நன்றி. இதே மாதிரிதான் புதிய 'ஆஸ்ப்ரோ'வும் உங்கள் தேகத்திற்குள் க்ஷணத்தில் வேலை செய்ய ஆரம்பிக்கிறது.




புதிய 'ஆஸ்ப்ரோ' அதைப்போலுள்ள மற்றெவ்விதமான வில்லைகளைக் காட்டிலும் வேகமாகக் கரைகிறது, என்பதை ரசாயனசாலைப் பரீக்ஷைகள் நிரூபித்துள்ளன. புதிய 'ஆஸ்ப்ரோ'வில் துர்ப்பழக்கம் உண்டாக்கும் மருந்துகள் எதுவும் சேர்க்கப்படவில்லை, அன்றியும் அது இருதயத்தையோ வயிற்றையோ பாதிக்காது.




**கைக்கடக்கமான மூன்று வில்லைகளடங்கிய**
**பாக்கெட் விலை 2 அணு**
**30 வில்லைகள் கொண்ட குடும்ப சைஸ் ரூ. 1/2**

279

விநியோகஸ்தர்கள்: முல்லர் அண்டு பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்,
பம்பாய், கல்கத்தா, மதராஸ், டில்லி.




## 18. பாம்பு கடித்தது!

உஸ்தாத் பீரானுடைய குரலைக் கேட்டதும், நல்ல பாம்பைக் கண்டவனைப் போல அப்படியே நாகரத்தினம் நடுநடுங்கிப் போன அதே சமயத்திலேதான், ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே மெய்யாகவே விஷப் பாம்பு நுழைந்திருந்தது. அதே வேளையிலேதான் புல்லாங்குழலின் இனிய ஒலியினால் கவரப்பட்டு ரவீந்திரனுடைய வீட்டுக்குள்ளே கந்தப்பனும் நுழைந்திருந்தான்.

என்ன எதிர்பாராத நிகழ்ச்சி! "ஐயோ! பாம்பு!" என்று மாடிப்படிகளிலிருந்து சந்திரிகா கதறியதும், உள் அறையிலிருந்து கல்யாணி கதவைத் திறந்து கொண்டு ஓடி வந்ததும், ரவீந்திரன் மெய்ம் மறந்த லயத்திலே புன்னாகவராளி ராகத்திலிருந்து சிம்மேந்திர மத்யமத்துக்குச் சென்றதும்—எல்லாம் சேர்ந்து கந்தப்பனை ஒரு சுழற்றுச் சுழற்றின. நல்ல பாம்போ படத்தை நன்றாக விரித்துக் கொண்டு நின்றது. இனி ஒரு கணம் தாமதித்தாலும் விபரீதம் சேர்ந்து விடும் என்று கருதிய கந்தப்பன் அப்படியே ரவீந்திரனை நோக்கி நடந்தான்.

இதற்குள் என்ன நேர்ந்தது? இதுவரை புன்னாகவராளியிலே இறங்கிப் போய் நின்ற அந்த நல்ல பாம்பு, இப்பொழுது ஸ்வரங்கள் பேதித்து சிம்மேந்திர மத்யமமாக மாறியதும் அப்படியே சீறியது. ரவீந்திரனுக்குத் தன்னுடைய உதட்டிலே பொருத்தியிருந்த புல்லாங்குழலின் துவாரங்களில், ஏதோ வந்து அடைப்பது போன்ற ஒரு பிரமை ஒரு கணம் உண்டாயிற்று. ஒலிக் கோவையிலே பின்னிப் போய் நின்றிருந்த அவனுடைய மனம் ஒரு விநாடி திகைத்தது. புல்லாங்குழலின் ஓசையும் அந்த ஒரு விநாடிக்குத் திகைத்து மருண்டது. ரவீந்திரனுடைய கண்ணுக்கு முன்பு இப்பொழுது நல்ல பாம்பு நிற்பது தெரிந்தது. அவனுடைய உடம்பெல்லாம் பதறியது. இதற்குள் பாம்பு தலையைப் பின்னாலே வளைத்துப் பாய்வதற்கு எவ்வி விட்டது!

வேகமாக ரவீந்திரனை நோக்கி நடந்த கந்தப்பன் இதைக் கவனித்து விட்டான். அப்படியே அந்த சர்ப்பத்தின் மேல் பாய்ந்து வலது கையினால் அதைப் பிடித்தான். ஆனால் எந்த இடத்திலே பிடிக்க நினைத்தானோ அந்தக் குறி தவறிப்போய் வால் பக்கமாகப் பிடித்துத் தூக்கினான்! ஓரே ஆங்காரமாகத் துவண்ட சர்ப்பம் அவனுடைய கையிலே பின்னிக் கொண்டே கழுத்தை ஒரு வளைப்பு வளைத்து, அப்படியே ஒரு போடு போட்டது, கந்தப்பனுடைய வலது கையில். பாம்பைப் பிடித்திருந்த கை தளர்ந்தது. தொப்பென்று பாம்பு கீழே விழுந்து, ஏதோ வந்த காரியம் முடிந்தது போன்று நகர ஆரம்பித்தது. கந்தப்பன் கீழே சாய்ந்தான்.

எல்லாம் ஒரு கணத்தில் நடந்த காரியம். கையும் காலும் 'வெட வெட' என்று நடுங்க, ரவீந்திரன் கீழே சரிகிற கந்தப்பனை ஏந்திப் பிடிப்பதற்காகப் பாய்ந்தான். கல்யாணியும் சந்திரிகாவும் கூக்குரல் இட்டுக் கொண்டே ஓடி வந்தார்கள்.




"ஐயோ! ஒரு கழி இருந்தால் கொண்டு வாருங்களேன்! பாம்பு இப்படி

நகர்கிறதே!" என்று கூப்பாடு போட்டாள் கல்யாணி. அவளுக்கு உதடெல்லாம் பதறியது.

கீழே சாய்ந்த கந்தப்பன், "தயவுசெய்து அந்தப் பாம்பை அடிக்காதீர்கள்!" என்று சொல்லிக் கொண்டே கண்ணை மூடியவாறு சுவரோடு சாய்ந்து கொண்டே தரையில் உட்கார்ந்து கொண்டான்.

"ஐந்து நிமிஷம் என்னை ஒன்றும் செய்யாதீர்கள். ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் பசும் பால் கொண்டு வாருங்கள்!" என்று சொல்லி விட்டு அப்படியே கண்களை இறுக மூடிக் கொண்டே சிறக்கத்தில் ஆழ்ந்தவனைப் போல சுவரிலே தலையைச் சாய்த்தவாறு உட்கார்ந்தான் கந்தப்பன்.

ரவீந்திரனுக்கு ஒரு படபடப்பு வந்தது. யாரென்று தெரியாத ஒரு வாலிபன் தன்னுடைய வீட்டுக்குள்ளே நுழைந்திருக்கிறான், தன்னைக் காப்பாற்றுவதற்காகப் பாம்பைப் பிடித்திருக்கிறான். அது அவனைக் கடித்து விட்டது. அதன் பிறகும் பாம்பை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சொல்கிறானே அவன்—இப்படி நினைத்துத் திகைப்பும் கவலையுமாக அந்த வாலிபனை இரண்டு கையாலும் அன்போடு அணைத்துக் கொண்டே நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"ஐயா! என்னை ஒருஐந்து நிமிஷம் ஒன்றும் செய்யாதீர்கள். நீங்கள் உள்ளேபோய் ஒரு கிண்ணத்தில் பால் எடுத்து வாருங்கள்" என்றான் வாலிபன்.

"தம்பி! என்ன அநியாயம் இது! என்னை அது கடித்துவிடும் என்று பயந்து நீ தடுக்க வந்து அந்த விஷத்தை நீ வாங்கிக் கொண்டு விட்டாயே! இப்பொழுது என்ன செய்வேன்! இன்னும் ஐந்து நிமிஷத்தில் நீ என்ன ஆவாய் — ஐயோ! தம்பி! நீ யாரப்பா! சொல்லு. உடனே உனக்கு ஏதாவது சிகிச்சை செய்ய வேண்டும்."

"சிகிச்சையா! எனக்கா! அதான் சொன்னேனே பால் கொண்டு வரும்படி—"

இவ்வாறு சொல்லிக் கொண்டே புன்முறுவல் செய்தான் கந்தப்பன். இதற்குள் கல்யாணி அம்மாள் ஒரு தம்ளரில் பால் கொண்டுவந்து வைத்தாள். பதறுகிற நிலையில் சந்திரிகாவும் அங்கு வந்து நின்றாள்.

"ஐயோ! அவருக்குத் தலை சுற்றுகிறது. யாராவது டாக்டரைக் கூட்டிக் கொண்டு வாருங்களேன்!" என்று கூச்சலிட்டாள் சந்திரிகா. அவளுக்குக் கண்ணீர் பொல பொலவென்று பொங்கியது.

"அந்தப் பிள்ளை தான் அப்படிச் சொல்லுகிறது என்றால் நீங்களும் சும்மா நிற்கிறீர்களே!" என்றாள் கல்யாணி.



இதற்குள் அந்த வாலிபன் தம்ளரைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, கண்களை மூடியவாறு ஏதோ தியானத்தில் இருப்பதுபோல் ஒரே மௌனமாக அசைவற்று இருந்தான்.

"தம்பி! என்ன இது! எங்களை ஏன் இப்படிக் குழப்புகிறாய்? என்னுடைய வீட்டுக்குள்ளே வந்த நீ என்னைக் கடிக்க வந்த பாம்புக்கு உன்னைக்

கொன்று கொடுத்து விட்டு இப்படிச் சொல்கிறாயே—"

"ஐயா! என்னை மன்னியுங்கள். சற்றுப் பொறுமையாக இருங்கள்!" என்று சொன்னான் கந்தப்பன்.

"தம்பி! அந்தப் பாம்பு என்னைக் கடித்திருந்தால்கூட இத்தனை கவலைப்பட்டிருக்க மாட்டேன். ஆனால்—" என்று சொல்லிக் கொண்டே குமுறினான் ரவீந்திரன்.



"ஆனால் உங்களை மட்டும் அது கடித்திருந்தால் நீங்கள் இதற்குள் சுழன்றிருப்பீர்கள். என்னைக் கடித்ததால் பிழைத்தீர்கள்" என்று நிதானமான குரலில் பேசினான் கந்தப்பன்.

"நான் பிழைத்து விட்டேன். ஆனால் எனக்காக நீதான் ஆன்மத் தியாகம் செய்கிறாயாக்கும்—" என்று வேகத்தோடு கேட்டான் ரவீந்திரன். அளவற்ற துக்கத்தினால் அவனுக்குக் கண் கலங்கியது.

"ஐயா! அந்தப் பாம்பு என்னைக் கடித்ததால் நாம் இருவருமே பிழைத்து விட்டோம். பாம்புதான் இப்பொழுது ஆன்மத் தியாகம் செய்கிறது!" என்றான் கந்தப்பன்.

"தம்பி! நீ என்ன சொல்கிறாய்—விசித்திரமாக இருக்கிறதே! நீ யாரப்பா?" என்று கேட்டான் ரவீந்திரன்.

"ஐயா! நான் பொதிகைமலைப் பளிஞர் கூட்டத்துத் தலைவனுடைய சகோதரி மகன். பாம்புகளோடு பிறந்து வளர்ந்தவன். என் வார்த்தைகளை நம்புங்கள். என்னைக் கடித்த நல்ல பாம்பு இன்னும் கொஞ்ச நேரத்தில் இறந்துவிடப் போகிறது. அந்த நாக சாந்திக்காகத்தான் பால் கொண்டு வரும்படி சொன்னேன். இப்பொழுது ஒரு விநாடி அந்தப் பாம்புக்காகத் தான் கையில் பாலை வைத்துக் கொண்டு பிரார்த்தனை செய்தேன்!"

"தம்பி! என்ன சொல்கிறாய் நீ? சுயநினைவோடுதான் பேசுகிறாயா? உண்மையாகவே நீ பிழைத்து விடுவாயா?" என்று கேட்டாள் கல்யாணி.

"நான் பிழைத்து விடுவேன், அம்மா! பாவம், பாம்புதான் செத்துப் போகும்! அதனால்தான் அதை அடிக்க வேண்டாம் என்றேன்!" என்று சொல்லியவாறு, முகத்தைச் சட்டையின் விளிம்பினால் துடைத்துக் கொண்டே கையைச் சுடக் கிட்டுக் கொண்டு, எழுந்தான் கந்தப்பன்.

"இந்த வாசலோடுதானே சென்றது பாம்பு! என்னோடு வாருங்கள். தாழ்வாரத்தைத் தாண்டிப் போயிருக்காது அது. அதற்குள் சுருண்டு விழுந்திருக்கும்!" என்று சொல்லி ரவீந்திரனையும் அழைத்துக் கொண்டு வெளித் தாழ்வாரத்துக்கு வந்தான் கந்தப்பன்.

என்ன ஆச்சரியம்! கந்தப்பன் சொல்லியபடியே அந்த நல்ல பாம்பு தாழ்வாரத்திலே சுருண்டு மடங்கிப் போய்ச் சணல் கயிறாகக் கிடந்தது. கல்யாணியும் சந்திரிகாவும் ஓரே வேகமாக வந்து அதைப் பார்த்தார்கள்.

"அதை ஒரு கழியால் எடுத்துத் தூர வீசுங்களேன்!" என்றாள் கல்யாணி. ஒரு சிறு குழந்தையைப்போல் உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டு நின்றாள் சந்திரிகா.

"கழிதானே? அதுதான் கூடாது!" என்று சொல்லிக்கொண்டே கந்தப்பன் பயபக்தியோடு சென்று அந்த நாகப் பாம்பை வலது கையினால் எடுத்துக் கொண்டு, "வாருங்கள், வெளியே போவோம். மடத்துக்குப் பக்கத்திலே உள்ள நந்தவனத்தில் இதைப் புதைத்து விட்டு வரவேண்டும்!" என்றான்.

"இந்தப் பாலை என்ன செய்யச் சொல்லுகிறாய் தம்பி?" என்றான் ரவீந்திரன்.

"இந்தப் பாலை ஊற்றி விட்டுத்தான், குழியிலே மண்ணைப் போட்டு மூட வேண்டும்!" என்றான் கந்தப்பன்.

ரவீந்திரனும் கந்தப்பனும் மெதுவாக வெளியே நடந்தார்கள்.

"என்ன ஆச்சரியம்! இப்படியும் உண்டா!" என்றாள் கல்யாணி, சந்திரிகாவைப் பார்த்து. சந்திரிகாவோடு அவள் முகம் கொடுத்துப் பேசுவதற்கு இப்படி ஏதாவது ஒரு ஆச்சரியகரமான சம்பவம் நடந்தால்தான் உண்டு!

"அக்கா! அந்தப் பையனைப் பார்த்தால் ஒரே இரக்கமாக இருக்கிறது! பாவம், என்னதான் அவன் தைரியம் சொன்னாலும் அவனுக்கு ஒன்றும் ஆகக்கூடாது என்று மனசு படபடக்கிறது!" என்றாள் சந்திரிகா.

"அவன்தான் பொதிகைமலைப் பளிஞன் என்று சொன்னானே. பளிஞர்களுக்குப் பாம்பு பயப்படும் என்று அப்பா அடிக்கடி சொல்லுவார்கள்!" என்றாள் கல்யாணி.

"என்னவோ அக்கா! அவருக்கு ஒரு பெரிய கண்டம்தான் இன்று. கடவுள் காப்பாற்றினார்!" என்றாள் சந்திரிகா. இந்த வார்த்தைகள் வந்ததும் கல்யாணியின் முகக் குறி மாறிற்று. அந்த "அவரை"ப் பற்றி அத்தனை உரிமையோடு சந்திரிகா பேசியது கல்யாணிக்கு விஷம் தலைக்கு ஏறியதுபோல் இருந்தது.



"கண்டம், கண்டம்! அவருக்குத்தான் நித்திய கண்டமாக இருக்கிறது!" என்றாள் கல்யாணி. சந்திரிகாவுக்கு முதலில் அந்த வார்த்தைகளின் விஷம் புரியவில்லை.

"நித்திய கண்டம் பூரண ஆயுசு என்பார்கள் அக்கா. அது போல அவருக்கும் ஒரு கெடுதலும் வராது அக்கா!"

இப்படிச் சந்திரிகா சொன்னபோது கல்யாணியின் முகத்தில் ஏற்பட்ட கடுமையைக் கவனித்தாள். விஷயம் புரிந்து விட்டது. அப்படியே 'விறு விறு' என்று உள்ளே போய் மாடிப் படிகளிலே ஏறினாள் சந்திரிகா. இதயம் விம்மியது. முந்தானையால் முகத்தைப் பொத்திக் கொண்டே சென்றாள்.

கல்யாணி வீட்டுக்குள்ளே போய்ப் பூஜை அறையில் நுழைந்து குத்து விளக்குக்கு முன்னால் நின்றாள்.

"அம்மா! தாயே! என்னுடைய மஞ்சளைக் காப்பாற்றினாய் அம்பிகே!" என்று சொல்லிக் கொண்டே கண்ணீர் வடித்தாள். அப்படியே கைகூப்பிய வண்ணம் தீப லக்ஷ்மியின் சந்நிதியில் வெகு நேரம் நின்றாள் கல்யாணி.

நல்ல பாம்பை அடக்கம் செய்துவிட்டு ரவீந்திரனும் கந்தப்பனும் வீட்டுக்குள்ளே நுழைந்தபோது, டாக்டர் சுரேஷின் கார் அங்கு வந்து நின்றது. டாக்டரும் அப்புலிங்கமும் அதிலிருந்து இறங்கினார்கள்.

"என்ன மிஸ்டர் ரவீந்திரன், உங்களோடு பேசுவதற்காக, இப்பொழுது சீன தேசத்துத் தத்துவ உலகிலிருந்து மிஸ்டர் யின் யாங் அப்புலிங்கத்தை எழுப்பிக் கொண்டு வந்திருக்கிறேன். தெரியுமா! அடடே! இது யார், இந்த இளைய நண்பர்?" என்று கேட்டுக்கொண்டே வீட்டுக்குள்ளே வந்தார் டாக்டர்.

அப்புலிங்கம் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டான். டாக்டரும் ரவீந்திரனும் நாற்காலிகளில் அமர்ந்தார்கள்.

"உட்காரு தம்பி!" என்று பக்கத்திலே கிடந்த இன்னொரு நாற்காலியைக் கந்தப்பனுக்குக் காட்டினான் ரவி. தயக்கத்தோடு அதில் உட்கார்ந்தான் கந்தப்பன்.

"பொதிகை மலையில் பளிஞர் என்று கேட்டிருப்பீர்களே டாக்டர்—" என்று ஆரம்பித்தான் ரவீந்திரன்.

"ஓ! சரி சரி, தம்பி நீ அர்ச் சூசையப்பர் கல்லூரியில் படிக்கிறாயோ?" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

"ஆமாம்" என்றான் கந்தப்பன்.

"உங்களுக்கு எப்படி அது தெரியும்?" என்று டாக்டரைக் கேட்டான் அப்புலிங்கம்.

"எனக்குத் தெரிந்த பாதிரியார் ஒருவர் ஒரு நாள் சொல்லிக்கொண்டிருந்தார். மலை ஜாதியினரை முன்னேற்றும் நோக்கத்தோடு அவர்களுடைய பிள்ளைகள் சிலரைப் பாளையங்கோட்டைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்திருந்ததாகவும், பளிஞர் தலைவனுடைய சகோதரி பையன் எஸ். எஸ். எல். ஸி. தேறிய பிறகு, இங்கே ஸெயின்ட் ஜோஸெப்ஸ் கல்லூரியில் மேல் படிப்புப் படிப்பதாகவும் சொன்னார். என்ன தம்பி சரிதானே நான் சொல்வது?" என்று கேட்டார் டாக்டர். கந்தப்பன் 'சரி' என்பதற்கு அடையாளமாகச் சிரித்தான்.

"உன்னுடைய பெயர் என்ன தம்பி?" என்று கேட்டார் சுரேஷ்.




Manufacturers:

**SRI VENKATA LODGE CONDIMENTS.**

KUMBAKONAM. S. INDIA.

Stockists in Delhi: Sri P.G. CHIDAMBARAM
7, Khanna Market, Lodhi Colony

# ஆஸ்த்மா, ஜலதோஷம் பிராங்கைட்டிஸ் செய்தி

**ஆயிரக்கணக்கான பேர்களுக்கு உவகை அளிக்கிறது**

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், இருமல், ஜலதோஷம், தும்மல், மூச்சடைப்பு, மூச்சுத் திணறல் முதலியவைகளால் கஷ்டப்பட்ட பல்லாயிரக்கணக்கானவர்கள் தற்பொழுது மெண்டாகோ (MENDACO) உட்கொண்டு மேற்கண்ட உபாதைகளிலிருந்து ஆச்சரியப் படும் அளவுக்கு சௌகரியம் அடைந்துள்ளார்கள். இந்த நவீன அமெரிக்க திட்ட முறையில் தயாரிக்கப்பட்டுள்ள மருந்து ரத்தத்துடன் கலந்து சுவாசப் பைகளுக்குச் சென்று, சுவாசக் குழாய்கள் மூலம் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டிப்பட்டு அடைத்துக் கொண்டிருக்கும் சளியை இளக்கி கரைத்து விடுகிறது. பிறகு நீங்கள் சுலமாக சுவாசிக்கலாம். இருமலும், மூச்சுத் திணறலும் நின்று விடுகிறது. குழந்தைமாதிரி நிம்மதியாக தூங்கலாம். உங்கள் மருந்துக் கடையிலிருந்து மெண்டாகோ (MENDACO) வாங்குங்கள். திருப்தி அளிக்கும். இல்லாவிடில் பணம் நிச்சயம் திருப்பித் தரப்படும்.

எங்கள் ஆதரவாளர்களுக்கு

## சுதந்திர தின வாழ்த்துக்கள்

நம்பிக்கைக்கும், நாணயத்திற்கும், உத்திரவாதத்திற்கும் பெயர்பெற்ற எங்களிடம் மீண்டும் உங்கள் அன்பையும் ஆதரவையும் எதிர்பார்க்கிறோம்



கும்பகோணம்

# ராதா ஸில்க் எம்போரியம்,

118, பெரிய தெரு, கும்பகோணம்

"கந்தப்பன்" என்று சொல்லும்போதே அவனுடைய முகம் புதுமை உணர்ச்சி காரணமாக வெட்கத்தினால் சிவந்தது.

"கந்தப்பன்! பேஷ். அழகான பெயர். மலைநாட்டுக் கடவுள் அல்லவா முருகன்! அவருடைய பெயரைத்தான் வைத்துக் கொண்டிருக்கிறாய்!" என்றார் சுரேஷ்.

"வள்ளிதான் எங்கள் குல தெய்வம்!" என்றான் கந்தப்பன். அப்போது அவனுடைய முகத்தில் குறையில்லாத ஒரு பெருமிதம் எழுந்து ஒளி வீசியது.

"வள்ளிதானே! அவள்தான் உங்களுக்குச் சொந்தக்காரி,—நெருங்கிய உறவு ஆயிற்றே! என்ன மிஸ்டர் அப்புலிங்கம், உங்கள் சித்தர் பாடல்களில் இதற்கு ஆதாரம் இருக்குமே?" என்றார் டாக்டர்.

"பேஷாக இருக்கிறது. '[illegible] நுழைந்தாண்டி' என்று அருட்பாவே இருக்கிறதே!" என்றான் அப்புலிங்கம்.

"டாக்டர், நம்முடைய பாரதியார் கூடப் பாடியிருக்கிறார், கேட்டதில்லையா நீங்கள்.

"சொல்லினைத் தேனிற் குழைத்துரைப்பாள் சிறு
வள்ளியைக்—கண்டு
சொக்கி மரமென நின்றனை
தென்மலைக் காட்டிலே!"

என்று பாடினான் ரவீந்திரன்.

"மிஸ்டர் ரவீந்திரன்! உங்களுக்குப் புல்லாங்குழல்தான் வரும் என்று நினைத்தேன். வாய்ப்பாட்டுக் கூட பேஷாக இருக்கிறதே!" என்றார் டாக்டர்.

"நான்கூட இனிப் புல்லாங்குழலை விட்டு விட்டு வாய்ப்பாட்டிலேயே இறங்கலாமா என்று யோசிக்கிறேன், டாக்டர்!" என்றான் ரவீந்திரன். டாக்டருக்கு ஒரு நிமிஷம் ஒன்றும் ஓடவில்லை. தான் புல்லாங்குழல் அனுப்பியதை ஒரு வேளை விபரீதமாக எடுத்துக் கொண்டானோ என்று யோசித்து, ரவீந்திரனுடைய முகத்தையே பார்த்தார். ஆனால் அதில் விபரீதமான நினைப்பு ஒன்றும் தெரியவில்லை. இதற்குள் ரவீந்திரனே தொடர்ந்து பேசினான், தான் புல்லாங்குழல் வாசித்ததும் நாகப் பாம்பு வந்ததும் பற்றி! பாம்பு மடிந்து விட்டது என்று ரவீந்திரன் சொன்னதும் அப்புலிங்கத்துக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

"அப்படியா! அப்படியா!" என்று இரண்டு மூன்று தடவை கேட்டான்.

"என்ன டாக்டர்! வேடிக்கையாக இருக்கிறதே. கோல்ட் ஸ்மித் என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய ஒரு பாட்டுத்தான் எனக்கு இப்பொழுது நினைவு வருகிறது!" என்றான் அப்புலிங்கம்.

"ஆமாம். நான்கூட எஸ். எஸ். எல். ஸி. யில் படித்த ஞாபகம். நாய் கடித்து விட்டது என்று சாங்கோபாங்கமாக அதை வர்ணித்து விட்டுக் கடைசி வரியில் 'ஆனால் இறந்தது நாயாக்கும்!' என்று ஹாஸ்யத்தோடு முடிக்கிறார் கோல்ட்ஸ்மித். அதைத்தானே சொல்கிறீர்கள் அப்புலிங்கம்?" என்று கேட்டார் சுரேஷ்.

"ஆமாம்!" என்று சொன்ன அப்புலிங்கம் அந்தக் கவிதை முழுவதையும் நினைத்து ஒரு முறை பலமாகச் சிரித்தான்.

"என்ன ரவீந்திரன், ஆச்சரியத்தோடு பார்க்கிறீர்கள்! டாக்டருக்கும் கவிதைக்கும் என்ன சம்பந்தம் என்று நினைக்கிறீர்களாக்கும். சம்பந்தம் இல்லைதான். ஆனாலும் இந்தக் கவிதை நாய்க்கடி விஷயத்தையும் விஷத்தையும் பற்றியதல்லவா! அதனால்தான் நன்றாக நினைவிருக்கிறது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

கந்தப்பன் இந்தப் பேச்சு ஒன்றிலும் கலந்துகொள்ள முடியாதவனாக மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தான். இதைக் கவனித்த டாக்டர் அவனைப் பார்த்துக் கேட்டார்:

"ஏன் தம்பி! உன்னைக் கடித்தால் பாம்பு ஏன் இறந்து போகிறது என்ற விஷயம் உனக்குத் தெரியுமா?" என்றார்.

"தெரியும். ஆனால் நீங்கள் டாக்டர். நான் சொன்னால் கேலியாக இருக்கும்!" என்றான் கந்தப்பன்.

"அப்படியானால் நானே சொல்லட்டுமா?" என்றார் டாக்டர். கந்தப்பன் திகைத்தான்.

"உங்கள் மலை நாட்டில் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போதே ஒரு வேரை அதில் கரைத்துக் கொடுக்கிறீர்கள். அப்படித் தானே!" என்றார் டாக்டர்.

"ஆமாம்" என்றான் கந்தப்பன்.

"அந்த வேருக்கு உடைய செடி தெரியுமா உனக்கு?" என்று கேட்டார் டாக்டர் சுரேஷ்.

"தெரியும். எங்கள் கூட்டத்தில் அதற்குப் பாம்பு வேர் என்று பெயர். அதில் மூன்று விதம் இருக்கிறது!"

"ஓ! அதில் மூன்று விதம் இருக்கிறதா! எனக்கு ஒன்று மட்டும் தான் தெரியும். அது சிவப்பாகப் பூப் பூக்கும்!"

"நீங்கள் அந்தச் செடியைப் பார்த்திருக்கிறீர்களா டாக்டர்!" என்று ரவீந்திரன் வியப்போடு கேட்டான்.

"பார்த்திருக்கிறேன், படத்தில்!" என்றார் சுரேஷ், சிரித்துக் கொண்டே.

அப்புலிங்கம் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தான். டாக்டர் சொன்னார்:

"இந்தப் பாம்பு சம்பந்தமான மருந்துச் செடிகளில் சர்ப்பகந்தி என்று ஒரு வகை. இது நமது நாட்டு மலைகளில் ஏராளமாக

வளர்கிறது. பதினாறாம் நூற்றாண்டில் ஒரு ஜெர்மன் டாக்டர் இதை எடுத்து ஆராய்ச்சி பண்ணியதன் பயனாக, இப்பொழுது நாங்களும் இதன் சத்தை மருந்து வடிவில் உபயோகிக்கிறோம்!"

"அப்படி யென்றால்?" என்று கேட்டான் ரவீந்திரன், ஆவலோடு.

"ஸெர்ப்பென்டைனா என்று அதற்கு மேனாட்டான் பெயர் கொடுத்திருக்கிறான்! பெயர் அன்னியமாக இருந்தாலும், சரக்கு நம்முடைய நாட்டுச் சரக்குத்தான் மிஸ்டர் ரவீந்திரன்! நம்முடைய ரஸம் இருக்கிறதே மிளகு ரஸம், மிளகுத் தண்ணீர்; அதைத்தான் இங்கிலீஷ்காரர்கள் 'மிலகு டானி' என்கிறார்கள். சரக்கு நம்முடையது தானே!" என்றார் சுரேஷ்!

கந்தப்பன் ஒரே வியப்போடு டாக்டரைப் பார்த்தான்.

"கந்தப்பன்! நான் சொல்வது உனக்குப் புதிதாக இருக்கலாம். நீ சொன்ன மூன்று வகையான செடிகளில் ஒரு செடியை மட்டும் இப்பொழுது ஆராய்ந்து மருந்து செய்திருக்கிறார்கள். அதாவது செடியை நாம் கடலுக்கு அப்பால் அனுப்ப வேண்டியது. அவர்கள் அதைக் குழாய்களிலே போட்டு வடிகட்டி மருந்தாக்கிப் பாட்டில்களிலே நமக்கு அனுப்புவார்கள். நாங்களும் ஏதாவது புரியாத பெயராகச் சொல்லி உங்களை யெல்லாம் பயமுறுத்தி மருந்து கொடுத்து வருகிறோம்! நீங்களும் அப்படிப் பயமுறுத்துகிற நீளமான பெயர்களைப் புரியாத பாஷையில் சொன்னால் தானே நம்புகிறீர்கள், என்ன மிஸ்டர் அப்புலிங்கம்?" என்று கேட்டார் சுரேஷ்.

"டாக்டர், உங்களுடைய தேச பக்தி எனக்கு இப்பொழுதுதான் தெரிகிறது. உண்மையில் உங்களை மாதிரி......"

"அப்பு! தேச பக்தி என்ற பெரிய வார்த்தையை மட்டும் உபயோகிக்காதீர்கள். காந்திஜியும், நேருஜியும் வாழ்கிற பாரத நாட்டில் நாமும் வாழ்வதே ஒரு பாக்கியம். மற்றப்படி அவர்களுடைய தேச பக்தியின் பயனை நாம் நன்றாக நிம்மதியோடு அனுபவிக்கிறதைத் தவிர, நமக்கும் தேச பக்தி இருக்கிறது என்று சொல்வதில் என்ன அர்த்தம்! மிஸ்டர் ரவீந்திரன், நீங்களே சொல்லுங்கள். சர்ப்பகந்திக்கும் தேச பக்திக்கும் என்ன சம்பந்தம்? நாம் அதை சர்ப்பகந்தி என்கிறோம். வடநாட்டில் சோட்டா சாந்த் என்றும் சந்திரிகா என்றும் பெயர்!"

"என்ன சந்திரிகாவா?" என்று கேட்டான் ரவீந்திரன், ஆச்சரியத்தோடு.

"ஆமாம்! சந்திரிகா என்ற இந்த மூலிகையும் இதோடு சேர்ந்த இன்னும் இரண்டு மூலிகைகளும்தான் இன்று உங்களுக்கு உயிர் கொடுத்தன. பாம்பின் உயிரைக் கொண்டு போய் விட்டன!"

"அப்படியா சொல்கிறீர்கள்?" என்று கேட்டான் அப்புலிங்கம்.

"இந்த வேரின் சத்து சிறு வயதிலிருந்தே மலை ஜாதியாரின் உடலில் கொஞ்சம் கொஞ்சமாகப் பாலின் மூலம் சேர்ந்து விடுகிறது. அதனால் உடம்புக்குப் பாம்பின் விஷத்தை எதிர்த்துக் கொன்று விடக் கூடிய சக்தி ஏற்பட்டு விடுகிறது. பாம்புக்கோ, அது அந்த உடம்பைக் கடித்தால் மருந்தின் வேகம் பாம்பைத் தாக்கி விடுகிறது! இந்த விஷயம் மேனாட்டு ஆராய்ச்சி முறையில் சொல்லுகிற காரியம். ஆனாலும் இந்த மூலிகைகளின் தன்மையை அவர்கள் இன்னும் முழுவதும் ஆராய்ந்து விடவில்லை. ஸெர்ப்பென்டைனாவை இரத்தக் கொதிப்பு, பைத்தியம் முதலிய நோய்களுக்கு இப்போது கொடுக்கிறார்கள்!" என்றார் சுரேஷ்.

கந்தப்பன் சொன்னான்: "டாக்டர் சார்! இந்த மூன்று மருந்துகள்தான் எங்களுக்கு எல்லா நோய்களுக்கும் உதவுகின்றன. கடுமையான ஜுரம் வந்தால் கூட இதன் இலைகளைச் சாப்பிடுவோம். உடம்பில் ரணம் ஏற்பட்டால் இலையைப் பிழிந்து அந்தச் சாறு பட்டால் போதும்!"

இப்படிக் கந்தப்பன் பேசிக் கொண்டிருக்கும் போதே கல்யாணி அம்மாள் கூடத்துக்கு வந்தாள்.

"உங்களைத்தானே! நீங்கள் பாட்டுக்கு எதை யெல்லாமோ பேசிக் கொண்டிருக்கிறீர்களே! பாம்பு வந்தாச்சு, இந்த வீட்டிற்குள். இனி ஒரு நிமிஷங்கூட இங்கே குடித்தனம் பண்ணக் கூடாது! தெரிந்ததா!" என்றாள் கல்யாணி.

"அப்படியானால்?" என்று ஒரே திகைப்போடு கேட்டான் ரவீந்திரன்.

"அதெல்லாம் உங்களோடு வாதாட எனக்குச் சக்தியில்லை. இந்த நிமிஷமே இந்த வீட்டைக் காலி பண்ணியாக வேண்டும். இன்றைக்கு ராத்திரி நான் இந்த வீட்டில் அடுப்புப் பற்ற வைக்கப் போவதில்லை. நல்ல பாம்பு நுழைந்த வீட்டிலே ஒரு நிமிஷங்கூட இருக்கக் கூடாது என்று அப்பா அடிக்கடி சொல்லுவார்கள்!"

தன்னுடைய நடப்பனுரை மேற்கோள் காண்பித்து, அந்தக் கடைசி வாக்கியத்தைக் கல்யாணி அம்மாள் சொல்லி முடித்தாளோ இல்லையோ, ரவீந்திரனுக்குக் கோபத்தினால் முகம் சிவந்தது. "என்ன விபரீதம் ஆகப் போகிறதோ தெரியவில்லையே!" என்று கவலை மேலிட்டவனாக அப்புலிங்கம் டாக்டரின் முகத்தையே கூர்ந்து பார்த்தான். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram

**பிரவேசக் கட்டணம் கிடையாது!**

# ரூ. 25,002

**ஜெயிக்க வேண்டும்**

முதல் பரிசு

**ரூ. 20,001***

இரண்டாவது பரிசு

**ரூ. 5,001**

* முதல் பரிசு பெற்றவரோ, அல்லது முதல் பரிசைப் பகிர்ந்தவர்களோ ஒன்று சேர்ந்து ஒரு குழந்தைகள் ஆஸ்பத்திரி அல்லது ஒரு வார்டுக்கு தருமமாக மற்றொரு தொகையான ரூ. 20,001 அளிப்பதற்கான உரிமையுண்டு.

## தவிர மற்றொரு தொகை ரூ.20,001 தருமத்திற்கு அளிக்கப்படும்!

இந்த அரிய

# டால்டாக்விஸில்

**முடிவு தேதி: செப்டம்பர் 30, 1955**

**முக்கியக் குறிப்பு:** ஒவ்வொரு பிரவேசப் பாரத்துடனும் ஒரு உடைக்காத, பூரா சீலோடு கூடிய, டால்டா டின்னின் மேல் மூடியை முழுமையாக அனுப்ப வேண்டியது அவசியம்.

### நீங்கள் செய்யவேண்டியது

உங்கள் டால்டா வியாபாரியிடமிருந்து ஒரு பிரவேசப் பாரத்தை பெறுங்கள். அதிலுள்ள சுலபமான 18 வாக்கியங்களைப் பூர்த்தி செய்யுங்கள் உங்களுடைய விடைகள் பிரத்யேகப் பரிசீலனைக் குழுவினரின் விடைகளுடன் ஒத்திருந்தால் நீங்கள் ஒரு பரிசு பெறுவீர்கள். இதற்கு பிரவேசக் கட்டணம் கிடையாது-ஒவ்வொரு பிரவேசப் பாரத்துடன் ஒரு 5 பவுண்டு டால்டா மார்க் வனஸ்பதி டின்னின் மேல்மூடியை மாத்திரம் அனுப்புங்கள். ஒரு 10 பவுண்டு டின்னின் மேல்மூடியுடன் இரண்டு பிரவேசப் பாரங்களை அனுப்பலாம்.




எல்லோரும் போட்டியில் கலந்து கொள்ளலாம். (பம்பாய், சௌராஷ்டிரா ஹைதராபாத், மைசூர் இராஜதானிகளிலுள்ளவர்களைத் தவிர).

**உங்கள் டால்டா வியாபாரியிடமிருந்து ஒரு பிரவேசப் பாரத்தைப் பெறுங்கள்.**

HVM. 250-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a newspaper in Ceylon










# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளி
லிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 250-50 TM